4 பக்கங்கள் 13 காசுகள்

பதிவு எண்: எம். 8798.

**குமரி மாவட்டத்தில் சி.ஐ.டி.யூ. தமிழ் மாநிலக் குழுவின் கூட்டம்**

சி. ஐ. டி. யூ. தமிழ் மாநிலக் குழுவின் கூட்டம் குமரி மாவட்டத்தில் செப்டம்பர் 14, 15, 16, 17 ஆகிய 4 தினங்கள் நடைபெறும், இடம் பின்னர் அறிவிக்கப்படும். குழு உறுப்பினர்கள் 13—9—72 மாலையே நாகர்கோவிலுக்கு வந்து சேர்ந்துவிட வேண்டிய உறுப்பினர்கள் கூட்டத்தில் கலந்து கொள்ளும் முறையில் தங்கள் வேலைகளை அமைத்துக் கொள்ள உதவும் பொருட்டே, தேதிகளை முன்னரே அறிவிக்கின்றோம். எல்லா உறுப்பினர்களும் தவறாமல் கூட்டத்தில் கலந்து கொள்ள வேண்டுகிறோம்.

மதுரை
26—8—72

ஏ. நல்லசிவன்
உதவிச் செயலாளர்
சி. ஐ. டி. யூ. தமிழ் மாநிலக்குழு

# தீக்கதிர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) நாளிதழ்

கதிர் 10) மதுரை 29 8 72 செவ்வாய் (மலர் 203

**கட்சி மாறுதல் தடுப்பு மசோதா ஏன்?**

புதுடெல்லி, ஆக. 28—

இவ்வளவு காலமாகச் சும்மாயிருந்துவிட்டு ஒரேயொரு மாநிலத்தைத்தவிர இந்தியா முழுவதிலும் காங்கிரஸ், ஆட்சிக்கு வந்த பின், காங்கிரஸ் கட்சிக்குள் புகைச்சல் ஏற்பட்டிருக்கும் இந்த நேரத்தில் கட்சி மாறல் தடுப்பு மசோதா கொண்டுவரப்படுவதை நாடாளுமன்றத்தில் எதிர்க்க எதிர்க்கட்சிகள் தீர்மானித்துள்ளன.

இந்த மசோதா சபையின் விவாதத்துக்கு வரும்போது இது 1971-ம் வருடத்திலிருந்தே பொருந்தத்தக்க நிலையில் இருக்கவேண்டும் என்று சில கட்சிகள் கோரும் என்று தெரிகிறது.

## ஆந்திர விவசாயிகள் எழுச்சி

# விஜயவாடாவில் பல்லாயிரக் கணக்கான பேர் ஊர்வலம்

## வரலாற்று சிறப்புமிக்க விவசாயிகள் பேரணி

விஜயவாடா,
ஆக. 21—

விஜயவாடா நகர் முழுவதும் ஆகஸ்ட் 20-ம் தேதி சிவப்புக் கொடிகளாலும் தோரணங்களாலும் செம்மயமாகத் தோற்றமளித்தது. ஆந்திர மாநிலங்களின் எல்லாபகுதி

பல ஆதிவாசிப் பெண்கள் உட்பட 2000 பெண்கள் அணிவகுப்புச் சென்றது ஊர்வலத்துக்கு அழகு சேர்த்தது.

இந்த ஆர்ப்பாட்ட ஊர்வலத்துக்கு மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியும் ஆந்



விவசாயிகள் பேரணியில் தோழர் சுந்தரய்யா பேசுகிறார். அருகில் தோழர்கள் அனுமந்தராவ், பசவ புன்னையா, ஏ. கே. கோபாலன் அமர்ந்துள்ளனர்.

களிலிருந்தும் 150 லாரிகளிலும், மற்ற வாகனங்களிலும் ரயில்களிலும், பஸ்களிலும் நடந்தும் தொழிலாளர்களும், விவசாயிகளும் மற்றும் சகல பகுதி மக்களும் வந்து குவிந்த வண்ணமிருந்தனர்.

அன்று விஜயவாடா தெருக்களில் வந்த ஊர்வலத்தில் 30 லிருந்து 35ஆயிரம் பேர் கலந்து கொண்டனர். ஊர்வலம் ஓர் இடத்தைக் கடக்க 4 மணி நேரம் பிடித்தது.

விவசாயிகளுக்கு நிலத்தைப் பிரித்துக் கொடுப்பதற்கான உண்மையான நிலச்சீர்திருத்தம் வேண்டும் என்று கோரியும், விலைவாசி உயர்வைக் கண்டித்தும், வரி உயர்வைக் கண்டித்தும் ஊர்வலத்தில் கோஷங்கள் எழுப்பப்பட்டன.

### மைதானம் ததும்பி வழிந்த பேரணி

ஊர்வலம் பி டபிள்யூ டி மைதானத்தை அடைந்ததும் நகரத்தின் எல்லா பகுதிகளிலிருந்தும் சுற்றுவட்டாரங்களிலிருந்தும் வந்து குவிந்த மக்களால் மைதானம் ததும்பி வழிந்தது. அந்த மைதானத்தில் 60 ஆயிரத்திலிருந்து 70 ஆயிரம் மக்கள் கூடியிருந்தனர்.

விஜயவாடா நகரில் இதற்குமுன்னர் இப்படியொரு கூட்டம் கூடியதில்லை.

கடுமையான வறட்சியும், பஞ்சமும், விலைவாசி உயர்வும் ஏற்பட்டிருந்தும் இவ்வளவு மக்கள் திரண்டதானது, ஏழைவிவசாயி மக்களிடம் உண்மையான நிலச்சீர்திருத்தத்துக்கான எழுச்சி ஏற்பட்டிருப்பதை எடுத்துக் காட்டியது. ஆயிரக்கணக்கான மக்கள் கைகளில் உணவுப் பொட்டலங்களைக் கொண்டுவந்திருந்தனர்.

### பெண்கள் அணி வகுப்பு

ஊர்வலத்தின் முகப்பில்

திர விவசாயத் தொழிலாளர் சங்கமும், விவசாயிகள் சங்கமும் அழைப்புக் கொடுத்த போதிலும் சி ஐ டி யூ, இந்திய மாணவர் சங்கம் ஆந்திர இளைஞர் சம்மேளனம், மாதர் சங்கம் போன்ற வெகுஜன ஸ்தாபனங்களைச் சேர்ந்த தோழர்களும் தங்களுடைய கொடிகளுடனும் பதாகைகளுடனும் வந்திருந்தனர்.

தோழர் சுந்தரய்யா ஊர்வலத்துக்கு தலைமை தாங்கினார்.

### ஆயிரம் கிராமங்களில் பிரச்சாரம்

13 மாவட்டங்களைச் சேர்ந்த ஆயிரம் கிராமங்களில் நூற்றுக்கணக்கான கூட்டங்கள் நடத்தியும் ஒரு லட்சம் துண்டு பிரசுரங்களை வினியோகித்தும், நிலச்சீர்திருத்தம் பற்றிய பிரசுரத்தின் 25 ஆயிரம் பிரதிகளை விற்பனை செய்தும் இரு வாரங்கள் நடத்திய இயக்கத்தின் விளைவாக இந்த மாபெரும் அணிவகுப்பு கூடியது.

கிருஷ்ணா மாவட்ட விவசாயிகள் சங்கத்தின் செயலாளர் தோழர் எம். சுப்பாராவ் அனைவரையும் வரவேற்று தலைவர்களை அறிமுகப்படுத்தினார்.

கட்சியும், வெகுஜன ஸ்தாபனங்களும் விடுத்த வேண்டுகோளுக்கேற்ப இவ்வளவு பெருந்திரளான மக்கள் கூடியதற்கு தோழர் அனுமந்தராவ் நன்றி தெரிவித்தார்.

காங்கிரஸ் காரிய கமிட்டியும் முதலமைச்சர்கள் மாநாடும் முந்தைய வாக்குறுதிகளை செல்லாக்காசாக்கிய பின்னர், வலது கம்யூனிஸ்ட் கட்சியும் காங்கிரஸ் கட்சியும் ஐதராபாத் நகரில் கூட்டாக நடத்திய அணிவகுப்பிலிருந்து பிரமைகளை பரப்பிய வர்க்கசமரசத்தை வெளிப்படுத்திய அணிவகுப்பிலிருந்து இந்த அணிவகுப்பு முற்றிலும் மாறுபட்டிருந்தது என்று தோழர் அனுமந்தராவ் கூறினார்.

உழைக்கும் மக்களது

கோரிக்கைகள் அடங்கிய சாசனத்தை தோழர் அனுமந்தராவ் வாசித்தார். கூட்டத்தினரின் பலத்த கையொலிமூலம் அது நிறைவேற்றப்பட்டது.

### தீர்மானம்

கூட்டத்தில் நிறைவேற்றப்பட்ட தீர்மானம் உச்சவரம்பு நஞ்சை நிலத்துக்கு 10 ஏக்கரிலிருந்து 15 ஏக்கராக இருக்க வேண்டும் என்றும், புஞ்சை நிலத்துக்கு 20 லிருந்து 30 ஏக்கர்வரை இருக்க வேண்டும் என்றும் குடும்பம் என்பது கணவனும், மனைவியும் மூன்று மைனர் அல்லது மேஜர் குழந்தைகள் அடங்கியது என்று வரையறை செய்ய வேண்டும் என்றும் எல்லா விதிவிலக்குகளையும் ரத்து செய்யவேண்டும் என்றும், உபரி நிலத்துக்கு நட்டஈடு

கொடுக்கக் கூடாது என்றும் கோரியுள்ளது.

### பினாமி மாற்றத்தை ரத்து செய்க

1961லிருந்து செய்யப்பட்டிருக்கும் எல்லா பினாமி மாற்றங்களையும் 1970செப்டம்பரிலிருந்து செய்து கொள்ளப்பட்டிருக்கும் விற்பனைகளையும் ரத்து செய்ய வேண்டும் என்றும் அத்தீர்மானம் கோரியுள்ளது.

நிலச்சீர்திருத்தத்தை உண்மையாக அமுலப்படுத்த வேண்டுமானால் விவசாயத் தொழிலாளர்களாலும் விவசாயிகளாலும் தேர்ந்தெடுக்கப்பட்ட கமிட்டிகள் இருக்கவேண்டியதின் அவசியத்தையும் அத்தீர்மானம் வலியுறுத்தியது.

கூட்டத்தில் பேசிய தோழர் சுந்தரய்யா விவசாயப் புரட்சியின் முக்கியத்துவத்தை விளக்கினார்.

### சுந்தரய்யா பேச்சு

கராச்சி காங்கிரசிலிருந்து தேசிய இயக்கம் கொடுத்து வந்திருக்கும் வாக்குறுதிகளுக்கு எவ்விதம் காங்கிரஸ் அரசாங்கம் துரோகம் செய்துள்ளதென்றும் நிலச்சீர்திருத்தத்தை அமுலாக்கக்கோரி கம்யூனிஸ்டுகள் எவ்விதம் போராடி வந்துள்ளனர் என்றும் தெலுங்கானா போராட்டத்தில் கண்டது போல் இந்த லட்சியத்துக்கு

அவர்கள் எவ்விதம் அரும் பெரும் தியாகங்கள் செய்துள்ளனர் என்றும் தோழர் சுந்தரய்யா விளக்கினார்.

சட்டமன்றத்தில் கொண்டுவரப்பட்டிருக்கும் மசோதா மூலம் விவசாயிகளுக்கு நிலம் கிடைக்காது என்பதையும் அவர் விளக்கினார்.

போராட்டங்களின் மூலம் ஏழை விவசாயிகள் நிலம் பெற முடிந்தது என்பதற்கு சமீபத்தில் நடைபெற்ற போராட்டங்களையும் அவர் விவரித்தார்.

தங்களுடைய கோரிக்கைகளுக்காக விவசாயத்தொழிலாளர்களும் விவசாயிகளும் ஒன்றுபட வேண்டியதின் அவசியத்தையும் அவர் விளக்கினார்.

மார்க்கெட் ஏற்றத்தாழ்வுகளாலும் வரிச்சுமையாலும்



விஜயவாடாவில் திரண்ட பல்லாயிரக் கணக்கான மக்களில் ஒரு பகுதி

பாதிக்கப்படும் விவசாயிகள் பொதுக் கோரிக்கைகளில் ஒன்றுபட்டே தீரவேண்டும் என்றும் அவர் கூறினார்.

உழைக்கும் மக்களின் லட்சியங்களுக்காக அவர்களுடன் சேர்ந்து எல்லாப் பகுதி மக்களும் போராட வேண்டும் என்றும் அவர் வேண்டுகோள் விடுத்தார்.

### ஏ. கே. ஜி. பேச்சு

மாபெரும் ஆர்ப்பாட்ட ஊர்வலம் நடத்திய தொழிலாளர்களையும் விவசாயிகளையும் அ.இ. விவசாயிகள் சங்கத்தின் சார்பில் தோழர் ஏ. கே. கோபாலன் வாழ்த்தினார். காகிதத்தில் சட்டம் எவ்வளவுதான் நல்லதாக இருந்தாலும் மக்களுடைய இயக்கமின்றி அது செயல்பட முடியாது என்பதையும் அவர் விளக்கினார்.

### போராட்டமே வழி

2 லட்சம் குடி கிடப்புக்காரர்கள் 6 மாத காலம் போராடிய பின்னரே, இ எம் எஸ் ஆட்சியில் நிறைவேற்றிய சட்டத்தின்படி குடியிருப்பு மனையைக் கொடுக்குமாறு அச்சுத மேனன் அரசாங்கத்தை நிர்ப்பந்திக்க முடிந்தது என்றும், இவ்வாறு செயலில் இறங்காத காரணத்தால் இன்னும் 6 லட்சம்குடிகிடப்புக்காரர்களுக்கு இன்று வரை பட்டா வழங்கப்படாமலிருக்கிறது என்றும் அவர்

விளக்கினார்.

### எதிர்பார்க்க முடியுமா?

உபரி நிலம் எங்கே இருக்கிறது என்று அரசாங்கத்தைப் பார்க்க செய்வதற்கும் அதை எடுத்துக் கொடுக்கவும் குறுகி பெறுவதற்கும் 2 லட்சம் தொண்டர்கள் 80 நாட்கள் போராடவேண்டியிருந்ததையும் அவர் விளக்கினார்.

உச்சவரம்புச் சட்டம் இயற்றி 2½ ஆண்டுகளாக அரசாங்கம் தூங்கிக் கொண்டிருந்திருக்கும்போது உபரி நிலம் எங்கே இருக்கிறது என்று சுட்டிக்காட்டியதற்காக 15 ஆயிரம் பேர் தண்டிக்கப்பட்டார்கள் என்றும் ஆனால் சட்டத்தை மீறி நடந்த ஒரு நிலச்சுவான்தார்கூடத் தண்டிக்கப்படவில்லை என்றும் அவர் கூறினார்.

காங்கிரஸ்—வலது கம்யூனிஸ்ட் தலைமையிலமைந்த இடதுசாரி ஜனநாயக சர்க்கார் என்று கூறப்படும் ஒரு சர்க்காரே இந்த லட்சணத்தில் நடந்திருக்குமானால் பிற போக்கு காங்கிரஸ் அரசாங்கங்கள் உழுபவனுக்கு நிலம் கொடுக்கும் என்று எங்ஙனம் எதிர்பார்க்க முடியும் என்றும் தோழர் ஏ. கே. கோபாலன் கேட்டார்.

கடந்த 25 ஆண்டுகளாக ஆட்சியாளர்கள் போலி கோஷங்களால் மக்களை ஏமாற்றினர் என்றும் இப்போது அவர்கள் சுதந்திர வெள்ளி விழா கொண்டாடுகையில் மக்கள் அதைப்பட்டினி வெள்ளி விழாவாகக் கருதுகின்றனர் என்றும் அவர் கூறினார்.

மக்களை தங்களுடைய கோரிக்கைகளுக்காக ஒன்றுபட்டுப் போராடவேண்டுமென்று அவர் கேட்டுக் கொண்டார்.

### பசவ புன்னையா பேச்சு

பின்னர் பேசிய தோழர் பசவ புன்னையா குறிப்பிட்டதாவது:—

இந்த ஆட்சியில் எவ்வளவு உச்சவரம்பு நிர்ணயிக்கப்பட்டாலும் உழவர்களுக்கு நிலம்கிடைக்காதபடி பார்த்துக்கொள்ளுவார்கள். இந்த ஆட்சியாளர்கள் மேற்கொண்டிருப்பது நிலச்சீர்திருத்தமல்ல. நிலப் பிரபுக்களின் சீர்திருத்தமேயாகும்.

இந்த அரசாங்கத்தை மாற்றி மக்கள் ஜனநாயக அரசாங்கத்தைக் கொண்டு வருவதன் மூலமே தங்களுடைய அடிப்படைப்பிரச்னை

களைத் தீர்க்க முடியும் என்பதை மக்கள் உணர வேண்டும்.

சோஷலிசத்துக்காகவும், நிலச் சீர்திருத்தத்துக்காகவும் போராடுவதாகக் கூறிக் கொள்ளும் இந்திரா காந்தி உண்மையான நிலச்சீர்திருத்தத்துக்கு நடவடிக்கை எடுத்த ரேவா மேற்கு வங்க ஐக்கிய முன்னணி அரசுகளை கவிழ்த்தார். இந்திரா அரசின் கபட வேடத்தை மக்கள் புரிந்து கொள்ளவேண்டும்.

இந்திரா அரசின் இந்த சூழ்ச்சிக்கு வலது கம்யூனிஸ்டுகளும் உடந்தையாளர்களாக இருந்துள்ளனர். நாட்டில் ஒருகட்சி சர்வாதிகாரம் ஏற்படுவதை எதிர்த்துப் போராடவேண்டும்.

---

## தனித்தனியாக தொழில்களுக்கு குறைந்த பட்ச ஊதிய உயர்வு கொடுக்கமுடியாதாம்

# இந்திரா - சுப்ரமண்யம் கைவிரிப்பு

## சிமெண்ட் தொழிலாளர் வேலைநிறுத்தம் நீடிக்கும்

**புதுடில்லி, ஆக. 28 "ஒவ்வொரு தொழிலிலும் ஊதிய உயர்வு கோரிக்கைகளை வேலை நிறுத்தங்களுக்கு பயந்து தனித்தனியே நிறைவேற்றப்போவதில்லை என்று மத்திய அரசு புதிய கொள்கையொன்றை முடிவு செய்திருப்பதாகத் தெரிகிறது" என்று "தினமணி"ச் செய்தியொன்று கூறுகிறது.**

ஆக 27ந்தேதிய தினமணி நாளிதழில் மேலும் கூறப்பட்டிருப்பதாவது:—

நாட்டின் பொருளாதார நிலைமையையும், உற்பத்தி அதிகரிப்பையும் கருத்தில் கொண்டு, நாட்டில் உள்ள எல்லாத் தொழில்களுக்குமுள்ள ஊதிய நிலைமையை மொத்தமாக பரிசீலிக்க வேண்டுமென தீர்மானித்துள்ளது.

மத்திய நிதி மந்திரி, தொழிலாளர் மந்திரி, தொழில்வளர்ச்சி மந்திரிகளுடன் பிரதமர் இந்திரா காந்தி இன்று காலையில் நடத்திய பேச்சுக்களில் இக்கொள்கை முடிவு செய்யப்பட்டதாகத் தெரிகிறது.

சிமெண்ட் தொழிலாளர் வேலை நிறுத்தத்தைப் பற்றிய விவாதத்தின் தொடர்பாக இந்கபொதுப் படையான கொள்கை உருவாகியிருக்கிறது.

**இதற்கு முன்னர் தொழிலாளர், தொழில், நிதி மந்திரிகள் நடத்திய விவாதத்தில், சிமெண்ட் தொழிலாளர்களுக்கு தொழிலாளர் மந்திரி திரு. கடில்கர் கொடுத்த ஊதிய உயர்வு வாக்குறுதியை நிறைவேற்றுவது அனுபவ சாத்தியமல்ல என்று ஒருமனதான கருத்து உருப்பெற்றது.**

### சிமெண்ட் ஸ்டிரைக் சமரச பேச்சு தோல்வி

சிமெண்ட் தொழிலாளர்களின் வேலைநிறுத்தத்தைப் பற்றி பிரதமர் இந்திரா காந்தியுடனும் தொழில்வளர்ச்சி மந்திரி திரு சி. சுப்ரமணியத்துடனும் தொழிலாளர் தலைவர்கள் இன்று நடத்திய பேச்சுக்களில் சமரச அறிகுறி எதுவும் உருவாகவில்லை.

வேலை நிறுத்தம் நீடிக்கப்படும் என்று தொழிலாளர் தலைவர்கள் திருமதி காந்தியுடன் பேசியபின்னர் நிருபர்களிடம் கூறினர்.

தொழிலாளரின் கோரிக்கையில் உள்ள நியாயத்தைத் தாம் உணர்ந்துள்ளதாகவும் ஆனால், அவர்களது கோரிக்கையை தொழிலாளர்கள் வற்புறுத்துகையில், நாட்டின் பொருளாதார நிலைமையையும் கவனிக்க வேண்டும் என்றும், பிரதமர் தொழிற்சங்கப் பிரதிநிதிகளிடம் வலியுறுத்தினாராம்.

கோரிக்கையை ஒத்திவைப்பதென்ற யோசனையை ஏற்க இயலாது என்று தொழிற் சங்கப் பிரதிநிதிகள் திரு சுப்பிரமணியத்திடம் "தெள்ளத் தெளிவாக" கூறிவிட்டனர் என்று. பேச்சுக்களுக்குப் பின், இந்திய தேசிய சிமெண்ட் தொழிலாளர் சம்மேளனத் தலைவர் திரு.

எச். என். திரிவேதி நிருபர்களிடம் சொன்னார்.

### கடைசிச் செய்தி

பம்பாய், ஆக 27—

சிமெண்ட் தொழிலாளர்களின் ஊதிய உயர்வுக் கோரிக்கை சம்பந்தமாக பிரதமர் இந்திராகாந்தியின் யோசனையைத் தான் ஏற்கத் தயாராக இருப்பதாக இந்திய தேசிய சிமெண்ட் தொழிலாளர் சம்மேளனத் தலைவர் எச். என். திரிவேதி அறிவித்துள்ளார்.

பிரதம மந்திரியின் முடிவை இறுதியானது என்று ஏற்றுக்கொள்ளத் தயாராக இருப்பதாக புதுடில்லியில் பேச்சு நடத்திவிட்டு பம்பாய் திரும்பிய திரிவேதி பிரதமர் இந்திராவுக்குத் தந்தி அனுப்பியுள்ளார்.

திரிவேதியின் அறிவிப்பு ஆக 21ந்தேதி வெளியிடப்பட்ட 7 தொழிற்சங்கங்களையுடைய கூட்டுப் போராட்டக்குழு அறிக்கைக்கு மாறானது. அந்த அறிக்கையின்படி எந்த முடிவையும் போராட்டக் குழுவில் வைத்து தீர்மானித்த பின்னரே வெளியிடவேண்டும் என்று ஒப்புக்கொள்ளப்பட்டுள்ளது.

இப்போது போராட்டக் குழுவை கலக்காமல் திரிவேதி அறிக்கை விட்டுள்ளார்.

### போனஸ் கமிட்டி அறிக்கை துரிதப்படுத்துக

கோவை ஆக 28—

போனஸ் கமிட்டி அறிக்கையை விரைவில் சமர்ப்பிக்கப்பட வேண்டுமென்று கோவை ஜில்லா பஞ்சாலை சங்க (சி ஐ டி யூ) மாநாடு கோரியுள்ளது இங்கு இன்று இந்த மாநாடு நடைபெற்றது.

தீபாவளி நெருங்கிக் கொண்டிருப்பதால், போனஸ் கோரிக்கைக்காக போராட்டங்கள் வெடிக்குமென்று மாநாடு அரசை எச்சரித்துள்ளது.

(முழு விபரம் பின்னர்)

# தீக்கதிர்

## அமைச்சர்கள் இருக்கும் இடத்திலேயே...

சுதந்திரதினவிழா கோலாகலக் கொண்டாட்டத்தின் கலகலப்பு இன்னும் ஓயவில்லை.

காங்கிரஸ் ஆட்சியாளர்கள் ஆகஸ்ட் 15-ம்தேதி உருவாக்கிய கனவுலகக் காட்சிகள் இன்னும் மக்கள் மனதைவிட்டு முழுமையாக அகலவில்லை.

இந்நிலையில் காங்கிரஸ் ஆட்சியாளர்கள் கட்டிய கனவுலகத்திலிருந்து டெல்லிவாழ் மக்களை ஆட்சியாளர்களின் குண்டாந்தடியும், துப்பாக்கி ரவைகளும் நனவுலகத்துக்கு அழைத்து வந்தது.

டில்லியின் புறநகர்ப் பகுதியான சதாராவில் ஆகஸ்ட் 18, 19, 20 தேதிகளில் போலீசார் ஆடிய வெறியாட்டத்தை வார்த்தைகளால் வர்ணிக்க முடியாது.

ஒரு கௌரவமான ஊர்க்காவல் படை அதிகாரியை போலீசார் படுகொலை செய்து விட்டனர். போலீசார் இதற்குக் கூறிய காரணம் அந்த அதிகாரி ஒரு கொள்ளைக் கூட்டத்தைச் சேர்ந்தவன் ஒரு கடத்தல் கூட்டத்தின் அதிபதி எனவே இந்த அதிகாரியைப் பிடிக்கப் போகும்போது நடந்த சண்டையில் அவர் மாண்டுவிட்டார் என்ற கட்டுக்கதையேயாகும்.

போலீசாரின் இக்கட்டுக்கதையை மக்கள் நம்பவில்லை. துரதிர்ஷ்டசாலியான அந்த ஊர்க்காவல் படை அதிகாரியை அவரது வீட்டிலிருந்து வெளியே வரச்சொல்லி துப்பாக்கியால் சுட்டு போலீசார் படுகொலை செய்தனர் என்று மக்கள் கூறுகின்றனர்.

இந்தப் பட்டப்பகல் படுகொலையைக் கண்ட மக்கள் கொதித்தெழுந்து கிளர்ச்சி செய்தனர். நியாயம் கேட்ட மக்களுக்கு காங்கிரஸ் ஆட்சியாளர்கள் அளித்த பரிசு குண்டாந்தடியும், துப்பாக்கி தோட்டாக்களும் தான்.

இதெல்லாம் காரணம்! இதுவரை கண்டிராத அளவு சதராவில் போலீஸ் படையை குவித்து போலீஸ் அதிகாரிகள் மக்களின் மீது அடக்குமுறை ஏவிவிட்டதுதான்.

முதன் முதலில் ஆகஸ்ட் 18-ந்தேதி சதாராவின் நிலையத்தில் போலீஸ் காட்டுமிராண்டித்தனமாக துப்பாக்கி சூடு நடத்தி ரபிக் அகமது என்ற 12 வயதே நிரம்பிய பையனைக் கொன்றனர் அதிலிருந்து ஆரம்பமானதுதான் போலீஸ் வெறியாட்டம்.

சதாராவிலுள்ள பல்பீர்நகர், ராம்நகர் பகுதியை போலீசார் சூறையாடினர். அங்கு நடத்திய தடியடியில் 24 பெண்களும் மற்றும் ஏராளமான ஆண்களும் படுகாயமடைந்தனர். பெண்களின் ஓலக்குரலால் அந்தப் பகுதியே அதிர்ந்தது.

போலீசார் வீடுகளின்மீது கற்களை வீசியெறிந்து பொதுமக்களை பீதியடையச் செய்திருக்கின்றனர். கூட்டத்தினரை நோக்கி போலீசார் கண்ணீர் புகைக் குண்டுகளை வீசிவிரட்டியடித்துள்ளனர். பல்பீர் நகர் வீடுகளில் புகுந்து கையில் அகப்பட்டவர்களையெல்லாம் பிடித்து நையப்புடைத்துள்ளனர்.

பீதியடைந்த ஆண்களும், பெண்களும் தங்களின் வீடுகளின் மேற்கூரையில் ஏறி உட்கார்ந்து கொண்டனர். இந்தப் பகுதியில் மட்டும் 50 பேரைப் போலீசார் பிடித்து காவலில் வைத்துள்ளனர்.

சாலையின் ஓரங்களில் கைது செய்யப்பட்டவர்களை நிறுத்திவைத்து அவர்களைச் சுற்றிலும் பலத்த போலீஸ் பாதுகாவல் போடப்பட்டிருந்தது.

போலீசார் வீடுகளின் கதவுகளை நொறுக்கி உள்ளே புகுந்து ஒரு பாவமும் அறியாத பெண்களையும் குழந்தைகளையும் ஈவிரக்கமின்றி அடித்து நொறுக்கியுள்ளனர்.

போலீஸ் அதிகாரிகள், தொழிலாளர்கள் ரிக்ஷா இழுப்பவர்கள், பால்காரர்கள் 300 க்கும் மேற்பட்டோர் கைது செய்யப்பட்டுள்ளனர் குழந்தைகள் கூட அவர்கள் விடுவைக்கவில்லை.

சாதாராவிலிருந்து ஆகஸ்ட் மாதம் 20-ந் தேதி இரவில்தான் அங்கு முகாமிட்டிருந்த போலீஸ் படையை வாபஸ்பெற உத்தரவிட்டிருக்கிறார்கள். இந்த உத்தரவிலிருந்தே இந்த மிகக் கொடுமையான மனிதத்தன்மையற்ற செயல்களுக்கு அங்கு முகாமிட்டிருந்த போலீசார் தான் காரணம் என்பது விளங்கும்.

இத்தனை கொடுமைகளும் ஆட்சியாளர்களின் தலைமைப் பீடமான டெல்லியைச் சுற்றிததான் நடைபெறுகிறது. இந்திரா காங்கிரஸ் கட்சியின் காரியக்கமிட்டி அலுவலகம் உள்ள இடத்திற்கு மிக அருகாமையில் தான் நடைபெற்றுள்ளது.

இருந்தும், போலீஸ் பட்டாளங்கள் ஒரு நாளல்ல, இரண்டு நாளல்ல—மூன்று நாட்கள் இத்தகைய வெறியாட்டம் நடப்பதை அனுமதித்துக்கொண்டுதான் இருந்திருக்கிறார்கள்.

கொடுமைகளுக்கு ஆளான சதாராவை எந்த அமைச்சரும் சென்று பார்க்கக்கூட இல்லை நாடாளுமன்றத்தில் சரமாரியான கேள்விகள் எழுந்தபோது உதவி உள்துறை அமைச்சர் கே. சி. பந்த் "அவசியம் ஏற்பட்டால்தான் கலவரம் நடந்த பகுதிகளை பார்ப்போம் என்று அலட்சியமாகப் பதில் கூறியுள்ளார்.

இந்தக் கொடுமையான சம்பவங்களை விசாரிப்பதற்கு நீதி விசாரணைக்கு உத்தரவிடப்பட்டுள்ளது

நீதி விசாரணைக்கு உத்தரவிடப்பட்ட பின்னரும் போலீசாரின் அச்சுறுத்தல் அதிகமாகியுள்ளது ஏராளமானோர் கைது செய்யப்பட்டுள்ளனர் என்று தகவல் வந்துள்ளது.

இந்த நீதி விசாரணை சரிவர நடைபெறுவதற்கும் பயமில்லாமல் மக்கள் வந்து சாட்சியளிப்பதற்கும் போலீஸ் அனுமதிக்கும் என்பது சந்தேகமே

நாடாளுமன்றக் கூட்டம் நடந்து கொண்டிருக்கும் போது தலைநகருக்குப் பக்கத்திலேயே போலீஸ் இத்தகைய காட்டுமிராண்டித் தனத்தைத் துணிந்து செய்திருப்பதைப் பார்க்கும் போது நாட்டில் போலீஸ் வைத்ததே சட்டமாக இருக்கிறது என்பதை அனைவரும் புரிந்து கொள்ள முடியும்.

# அகதிகள் உதவிக்கு வந்த பொருட்கள் கள்ளமார்க்கெட்டில் விற்பனை

புதுடில்லி, ஆக. 25— வங்கதேச அகதிகள் நிவாரணத்திற்காக உலக முழுவதிலிருந்து வந்த பொருட்கள் பகிரங்கமாக கள்ள மார்க்கெட்டில் விற்பனை செய்யப்படுவது கண்டு பிடிக்கப்பட்டுள்ளது.

அகதிகளுக்காக வந்த பால்பவுர்டின்கள், பெட்சீட், சமக்காளங்கள், உல்லன் பனியன்கள் எல்லாம் கள்ளமார்க்கெட்டில் விற்கப்படுகின்றன.

வங்கதேச நிவாரணத்திற்காக வந்த 20 கோடி மதிப்புள்ள பால் பவுடர் டின்களில் சுமார் ரூ. 7 கோடிக்குமேல் மதிப்புள்ள பால்டின்கள் கடத்தப்பட்டு கள்ள மார்க்கெட்டில் விற்கப்படுகின்றன.

வங்கதேச யுத்தம் நடந்து கொண்டிருக்கும்போது அவசர அவசரமாக சாமான்களை அனுப்புகையில் ஏதோ கொஞ்சம் பொருட்கள் வேண்டுமானால் தவறியிருக்கலாம். ஆனால் இப்படி அடியோடு களவாடப்பட்டிருப்பது கண்டு அனைவரும் அதிர்ச்சியடைந்துள்ளனர்.

### பெட்ஷீட்கள் விற்பனை

அதுபோலவே அகதிகள் முகாமிற்கு வந்த 9லட்சத்து 50 ஆயிரம் பெட ஷீட்களில், 3 லட்சத்து 17 ஆயிரம் பெட்ஷீட்களே விநியோகம் செய்யப்பட்டுள்ளன. மீத முள்ள 6 லட்சத்து 33 ஆயிரம் பெட்ஷீட்களும் கடத்தப்பட்டுள்ளன.

### டெல்லி மார்க்கெட்டில்

டெல்லி மார்க்கெட்டில் அன்னிய நாட்டு உல்லன் பனியன்கள் வெளிப்படையாகவே விற்கப்படுகின்றன. டெல்லி வியாபாரிகள் இந்த உல்லன் பனியன்கள் வங்கதேச அகதிகளுக்காக வந்தவை என்று கூறியே விற்கிறார்கள்.

இதற்குக் காரணம், கல்கத்தாவிலிருந்த செஞ்சிலுவைச் சங்கம் இப்பொருட்களின் விநியோகம் பற்றி சரியான கணக்கு வைத்துக் கொள்ள முடியவில்லை. எனவே அதிக ஊழியர்கள் தேவை என்று பலமுறை எழுதியும் தக்க நடவடிக்கை எடுக்கப்படவில்லையாம்.

அரசின் அலட்சியமே இத்தகைய அவமானகரமான செயலுக்கு காரணம் என்று கூறப்படுகிறது.

### தீக்கதிர் வளர்ச்சிநிதி

சேந்தமங்கலம் லாடத் தொழிலாளர் சங்கம் தோழர் ராஜு மூலமாக ரூ. 5

23-8-72 தேதி ஆனையூரில் வேலுச்சாமிக்கும் சேதுலட்சுமிக்கும் நடந்த திருமணத்தின்போது ரூ. 5- வழங்கப்பட்டது.

## பாளையங்கோட்டை கல்லூரியில் பட்டிமன்றம்

பாளையங்கோட்டை, ஆக 26— பாளையங்கோட்டை தூய யோவான் கல்லூரியின் திட்டக்குழுவின் சார்பில் "நாடு விரைந்து முன்னேற துணை செய்வது மார்க்சிஸமா? காந்தீயமா?" என்ற பொருளின் மேல் துணைப் பேராசிரியர் ஞா. குருபாதம் தலைமையில் பட்டிமன்றம் நடைபெற்றது. மார்க்சிசத்தை ஆதரித்து தோழர்கள் வல்லபாய், சங்கரநாராயணன், அய்யனார், சுப்பிரமணியன், கிருஷ்ணன் திரவியம் ஆகியோர் சிறப்பாகப்பேசினர். காந்தீயத்தை ஆதரித்து யாக்கோபு, ஜான்ஸன், கண்ணன், செல்வமணி, இராதாகிருஷ்ணன் ஆகியோர் பேசினர்

தலைவர் முடிவுரையில் "காந்தீயம் பேசுவதற்கு இனிமையாக இருப்பினும் நடைமுறைக்கு ஒவ்வாதது; ஆகவே மார்க்சிசமே நாட்

(6-ம் பக்கம் பார்க்க)

## மதுராந்தகத்தில் மறியல்

மதுராந்தகம், ஆக. 25— மதுராந்தகத்தில் தோழர் சி. கி. ராதாகிருஷ்ணன் தலைமையில் தோழர்கள் டி. ஜி. திம்மையா, எ. நாராயணசாமி வெங்கடேசன், எழுமலை ஆகிய ஐவரும் ஆக. 23-ந்தேதி காலை தாசில்தார் ஆபீஸ் முன் மறியல் செய்யச் சென்ற போது கைது செய்யப்பட்டனர்.

மறியலுக்கு முன்னர், மதுராந்தகம், கருங்குழி, கூடலூர், தட்டாம்பட்டு, மலைப்பாளையம், திருக்கழுக்குன்றம், பிக்காட்பேட்டை ஊர்களிலிருந்து மதுராந்தகம் வட்ட விவசாயிகள் சங்கம், மார்க்சிஸ்ட் கட்சி ஆகியவற்றின் சார்பில் ஏராளமான தோழர்களும், விவசாயத் தொழிலாளர்களும், சிறுநில விவசாயிகளும் கலந்து கொண்ட ஊர்வலம் நடந்தது மதுராந்தகத்தின் பிரதான வீதிகள் வழியே ஐந்து அம்சக் கோரிக்கைகளை வலியுறுத்திக் கோஷமிட்டு வந்த காட்சி மக்களின் இதயத்தை ஆகர்ஷிப்பதாக இருந்தது.

மாலை 6-30 மணிக்கு மறியல் செய்தவர்கள் விடுவிக்கப்பட்டவுடன் மீண்டும் கோஷங்களுடன் அவர்கள் ஊர்வலமாக அழைத்து வரப்பட்டனர்.

## பொள்ளாச்சியில்

ஆக 21, 22, 23ல் தோழர் கே. பாலகிருஷ்ணன் தலைமையில் 7 தோழர்களும், இரண்டாம் நாள் தோழர் ஆர் நாகரத்தினம் தலைமையில் 10 தோழர்களும், மூன்றும் நாள் டி. யூ. குப்புசாமி தலைமையில் தலைமையில் 13 தோழர்களும் வட்ட அலுவலகம் முன்பு நடைபெற்ற மறியலில் கைது செய்யப்பட்டனர். மறியலுக்கு முன்பு மாபெரும் ஊர்வலம் நடத்தப்பட்டது.

# அகில இந்திய விவசாயிகள் சங்கத்துக்கு பல்கேரியா வாழ்த்து

சோபியா, ஆக 25— அகிலஇந்தியவிவசாயிகள் சங்கத்திற்கு பல்கேரிய விவசாயிகள், உணவுப் பொருள் தொழிற்சாலைத் தொழிலாளர்கள் சங்கம் தனது வாழ்த்துக்களை தெரிவித்துள்ளது.

தனது வாழ்த்தில் 'நமது இரு தோழமை சங்கங்களுக்கிடையேயும் நட்பும் ஒற்றுமையும் மேலும் தழைத்தோங்க வாழ்த்துகிறோம். உங்களின் எதிர்காலப் பணிகளின் வெற்றிக்காகவும் உங்களை வாழ்த்துகிறோம்'' என்று பல்கேரிய விவசாய சங்கத்தலைவர் தோழர் என். பிலோவ் குறிப்பிட்டார்.

இந்த வாழ்த்தை தோழர் பிலோவ், பல்கேரிய விவசாயிகள் உணவுப் பொருள் தொழிற்சாலை தொழிலாளர்களின் 8-வது மாநாடு பல்கேரிய நாட்டின் தலைநகரான சோபியாவில் மே 19-ம் நாள் நடைபெற்ற போது தெரிவித்துள்ளார்.

அந்த மாநாட்டு விபரங்களை அகில இந்திய விவசாயிகள் சங்கத்திற்கு பல்கேரிய விவசாயிகள் சங்கம் அனுப்பியுள்ளது!

அந்த மாநாட்டில் 7-வது மாநாட்டிற்கும், 8-வது மாநாட்டிற்கும் இடைப்பட்ட காலத்தில் நடந்த வேலைகளைப் பற்றிய விரிவான அறிக்கையை விவசாய சங்கத்தின் மத்தியக் குழு சமர்ப்பித்தது.

நாடு முழுவதிலுமிருந்து 800 பிரதிநிதிகளும் 100 பார்வையாளர்களும் மாநாட்டில் கலந்துகொண்டனர்.

இந்தோ—சீனாவில் அமெரிக்க ஏகாதிபத்தியத்தின் காட்டுமிராண்டித்தனமான அடக்குமுறையை வன்மையாகக் கண்டித்தும் போராடும் வீரவியட்நாம் மக்களுக்கு தனது முழு ஆதரவை நல்கியும் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

பல்கேரிய விவசாயிகள்— உணவுப்பொருள் தொழிற்சாலை தொழிலாளர் சங்கத்தின் 7-வது மாநாட்டின் போது எடுத்த முடிவின்படி, தொழிற்சங்கப் பணிகளை மேலும் சிறப்பாகச் செய்ய, ஒன்றுயிருந்த விவசாயிகள் உணவுப்பொருள் தொழிற்சாலை தொழிலாளர் சங்கத்தை இரண்டு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டது தனித் தனியாக பிரிக்கப்பட்ட விவசாயிகள் சங்கம், உணவுப்பொருள் தொழிற்சாலை தொழிலாளர் சங்கத்தின் பணிகளைப்பற்றி விவாதிக்கப்பட்டது.

மீண்டும் இதுபோலவே இருபகுதிகளாகவே பிரிந்து செயல்பட 8-வது மாநாட்டிலும் முடிவு செய்யப்பட்டது.




## ஏழைகளின் நிலையும் அரசு டாக்டரின் போக்கும்

ஐயா,

இன்று பிற்பகல் 3 மணி அளவில் நானும் எனது நண்பரின் மனைவியும், உயிருக்கு மன்றாடும் அவரது 5 மாதக் குழந்தையுடன் சின்ன காஞ்சிபுரம் வெங்குடி மருத்துவமனை டாக்டர் ஒருவர் வீட்டிற்குச் சென்று காலிங்பெல் அடித்தோம்

அவரது துணைவியார் வந்து என்ன என்றார்கள்? அதற்கு நான் குழந்தை நிலைமை மிகவும் மோசமாக உள்ளது. அது நிற்காத வாந்தி மற்றும் பேதியுடன் உயிருக்கு மன்றாடிக் கொண்டிருக்கிறது. உடனே டாக்டரைக் கூப்பிடுங்கள் என்றேன்.

அவர்கள் சென்று சிறிது நேரத்திற்கெல்லாம திரும்பி வந்து ஆஸ்பத்திரி ஆறு மணிக்குத்தான் ஆரம்பம்: அப்பொழுது வாருங்கள் என்று கூறி சென்று விட்டார்கள். மீண்டும் கூப்பிட்டு குழந்தை மிகவும் சீரியசாக உள்ளது 6 மணி வரை குழந்தை உயிர் தாங்காது. உடனே டாக்டரை கூப்பிடுங்கள் என்றேன். அதற்கு அவர் இப்பொழுது தான் டாக்டர் சாப்பிட்டார். எனவே வர இயலாது. 6 மணிக்கு வாருங்கள் எனக் கூறிச் சென்று விட்டார்.

மிகுந்த வேதனையோடு சேயின் தாய் கதறியது என் இதயத்தை பிளந்தது. தாளாத வேதனையோடு ஒரு டாக்டர் பாலசுப்ரமணியம் வீட்டிற்கு சென்று காலிங்பெல் அடித்தேன்.

அதற்கு அந்த டாக்டர் வெளியே வந்து என் தோற்றத்தை பார்த்து என்ன? என்று விரைப்புடன் வேண்டா வெறுப்புடன் கேட்டார் நான் குழந்தையின் உடல்நிலையை எடுத்துரைத்தேன், உடனே அவர் குழந்தையை ஏறிட்டும் நோக்காது 4 மணி வரை காத்திருங்கள். இல்லையேல் கவர்ன்மெண்ட் ஆஸ்பத்திரிக்குச் செல்லுங்கள் என்றுஎரிச்சலோடு சொல்லி பின் உள்ளே சென்றுவிட்டார்.

உயிருக்கு மன்றாடும் குழந்தையைக்காக்க இந்த டாக்டர்களுக்குநேரமில்லை ஆனால், பணம் படைத்தவன் வீட்டிலிருந்தே வயிற்றை வலிக்கிறது என 'போன்' செய்தாலேயே எந்த நேரத்திலும் காரை எடுத்துச் செல்வதற்கு இவர்கள் தயாராக உள்ளார்கள். புனிதமான டாக்டர் தொழிலை கெடுக்கும் கொடுங்கோலர்கள்.

இந்த லட்சணத்தில் இவர்கள் நித்தம் பூசை செய்வதிலும சங்கராச்சாரியாருக்கு பூரண கும்பம் தருவதிலும் முதன்மையாக நிற்கும் வேடதாரிகள்.

ரிக்ஷாக் காரன்கூட, ஐயா, உங்களால் முடிந்ததைத்தாருங்கள்எவ்வளவு நேரமானாலும் நான் காத்திருக்கிறேன் என்று கூறிய போது, இவருக்கு இருக்கும் பொறுமைகூட, நாள் கணக்கில் ஏழைகளை வஞ்சித்து நூற்றுக்கணக்கில் சம்பாதிக்கும் இந்த வேடதாரிகளுக்கு இல்லையே?

தோழமையுள்ள
கு. சுப்பிரமணியன்

## தி. மு. க. சேர்மனை எதிர்த்து தி. மு. க. வினர் உண்ணாவிரதம்

ஆற்காடு, ஆக. 25— ஆற்காடு நகர் தி. மு. க. சேர்மன் பெ. தா. ஈஸ்வரன் கோஷ்டிக்கும், எதிர்கோஷ்டிக்கும், கலவரம் முற்றியுள்ளது நகர்மன்ற சேர்மனை எதிர்த்து எதிர் கோஷ்டி உண்ணாவிரதம் இருக்கிறது.

தங்கள் உண்ணாவிரதம் பற்றி எதிர்கோஷ்டியினர் வெளியிட்டுள்ள துண்டு பிரசுரம் பின்வாறு:—

### கருணாநிதி கட்டிடம்

ஆர்க்காடு அறிஞர் அண்ணா சாலையில், பேருந்து நிலையத்திற்குப் பக்கத்தில் பத்து கடைகள் கொண்ட கட்டிடத்திற்கு "கலைஞர் கருணாநிதி கட்டிடம்" என்று பெயர் வைக்கக் கோரும் கழகத் தோழர்கள், நகர மன்ற உறுப்பினர்கள் சிலர் தீர்மானம் கொண்டு வந்தனர். இதை நிராகரித்து ஆற்காடு நகர மன்றத் தலைவர் தன் எதேச்சதிகாரப் போக்கால் தன் பெயரால், 'சேர்மன் பெ. தா. ஈசுவரன் மாளிகை' என்று பெயர் வைத்துக் கொண்டுள்ளார்.

### சுய விளம்பரம்

அதற்கு நாங்கள் முறையான எதிர்ப்பு தெரிவித்து இருக்கிறோம். அது பற்றி மேலிடம் ஆய்வு செய்து முடிவு எடுக்காத முன்பே தன் பெயர் வைத்த பெயர்ப் பலகையை ரூபாய் 850-00செலவில், நகர மக்களின் வரிப் பணத்தைக் கொண்டு, தன்னுடைய சுய விளம்பரத்திற்குப் பயன்படுத்திடவே என்று 14—8—72 அன்று இரவு மேற்படி கட்டிடத்தில் பெயர்ப்பலகை அமைத்து விட்டார்.

### உண்ணாவிரதம்

எனவே தலைவரின் எதேச்சதிகாரப் போக்கைக் கண்டித்து "சேர்மன் பெ. தா. ஈசுவரன் மாளிகை" பெயர்ப் பலகையை அகற்றக் கோரி 15—8—72 அன்று காலை 8 மணி முதல் 16—8—72 காலை 8 மணி வரை மேற்படி கட்டிடத்தின் பக்கத்தில் அடையாள உண்ணாவிரதம் இருக்கின்றோம் பொது மக்களும் பெரியோர்களும் கழகத் தோழர்களும் எங்களை வாழ்த்தி எங்கள் கோரிக்கை வெற்றி பெற ஆதரவுதர வேண்டுகிறோம் என்று தி மு க நகர் மன்ற உறுப்பினர்களான கவிஞர் பூபால இளங்கோவும், ஆ. ப. ஏகாமபரமும், ஆற்காடு தி மு க செயற்குழு உறுப்பினரான இரா முருகேசனும் துண்டுப் பிரசுரம் வெளியிட்டு உண்ணாவிரதம் இருந்தனர்.

### நீர்மட்டம்

மேட்டூர், ஆக. 25— இன்று நீர்மட்டம் 62 அடியாக இருந்தது. மேட்டூர் அணைக்கு நிமிடத்திற்கு 33 ஆயிரத்து 920 கனஅடி வீதம் தண்ணீர் வந்து கொண்டிருக்கிறது. அணையிலிருந்து நிமிடத்திற்கு 28 ஆயிரம் கனஅடி வீதம் தண்ணீர் வெளியேறிக் கொண்டிருக்கிறது.

(8-ம் பக்கத் தொடர்ச்சி)

டின் விரைவான முன்னேற்றத்திற்குத் துணைசெய்வது" என்று தீர்ப்புக்கூறினார். திட்டக்குழுச் செயலாளர் தோழர் சுப்பையா நன்றி கூறினார்.

## அதனால்— வெள்ளிவிழாக்கள் வேறு வேறல்ல...

— ஜனநாதன்

அவர்கள் இவ்வளவு பருவதாகத்தோடு
போய்ப் போய்ப் பார்க்கிறார்களே என்றுதான்
அந்தப் படத்தை அவனும் பார்த்தான்.
அவர்கள் இவ்வளவு பசித்தவிப்போடு
போய்ப் போய்ச் சேருகிறார்களே என்றுதான்
அந்தக் கட்சியில் அவனும் சேர்ந்தான்
அவனும் ஒரு பாமரன்!

அந்த வண்ணப்படத்திலே வந்த படகோட்டி
பட்டுச் சொக்காய் போட்டுக் கொண்டு
வறுமையைப் பற்றி பாட்டுப்பாடினான்.
அந்த ஊர்வலத் தேரிலே வந்த மாண்பழகன்
மலர்க்கிரீடம் சூட்டிக் கொண்டு
சோசலிசத்தைப் பற்றி சொற்பொழி வாற்றினான்

இருபத்தைந்து வாரங்கள் ஓட்டிய பின்னால்—
அந்தப் படத்திற்கு வந்தது வெள்ளி விழா!
இருபத்தைந்து ஆண்டுகள் கழித்த பின்னால்
அந்த நாட்டிற்கு வந்தது வெள்ளி வீழா!

அந்தப் படத்தை
கதை வசனமெழுதி இயக்கி வெளியிட்ட
தயாரிப்பாளருக்குக் கிடைத்த பட்டம்—
"இவ்வாண்டின் மிகச் சிறந்த" தயாரிப்பாளர்!
அந்த நாட்டை
"கத்தியின்றி ரத்தமின்றி" பெற்றெடுத்த
தகப்பனுருக்குக் கிடைத்த பட்டம்—
"இந்நாட்டின் மிகச்சிறந்த" தேசப்பிதா!
அந்தப்படத்தில் படகோட்டியாய் பாடி நடித்த
பெண்ணூர் மேனியனுக்குக் கிடைத்த பட்டம்
"இவ்வாண்டின் மிகச்சிறந்த பரதன்"!
அந்த நாட்டில் பிரதமத் தளபதியாய்
தலைமை வகித்த—
மனிதகுல மாணிக்கத்துக்குக் கிடைத்த பட்டம்
"இந்நாட்டின் மிகச்சிறந்த சோசலிச ஜோதி!"

வெள்ளி விழாவன்று,
பாமரத்தனமான ரசிகர்களால் தியேட்டர்
நிரம்பி வழிகிறது
வெளியே தேங்கும் ரசிகர்களின் முன்னால்—
"ஹவுஸ்புல்" —இடம் இல்லை! அறிவிப்புகள்!
பாமரத்தனமான ஏழைகளால் இந்தியா
நிரம்பி வழிகிறது!
வெளியே திகைக்கும் ஏழைகளின் முன்னால்
'நோவேகன்சி" —வேலைகாலியில்லை! அறிவிப்புகள்

இங்கே வண்ண வண்ண விளக்குகளால்
தியேட்டர் கதவுகள் ஜிலு ஜிலுப்பதைப் போலவே
அங்கே வண்ண வண்ண விளக்குகளால்
பாராளுமன்றத் தூண்கள் ஜொலிஜொலிக்கின்றன.
இரண்டிலும் கிடைத்த வசூல் காசோ—
"கொள்ளைக்காசு"

இதனால்... இங்கே... இவர்களுக்கு...
ராஜேஸ் கண்ணாவும் ஒன்றுதான்!
காந்தீ அண்ணலும் ஒன்றுதான்!
மக்கள் திலகமும் ஒன்றுதான்!
வந்தே மாதரமும் ஒன்றுதான்!
ஷர்மிளா தாகூரும் ஒன்றுதான்!
ரவீந்திரநாத் தாகூரும் ஒன்றுதான்!
ஜெயலலிதாவும் ஒன்றுதான்!
ஜெய்ஹிந் கோஷமும் ஒன்றுதான்!
ஆபாசத்தை ஒழிப்போமும் ஒன்றுதான்!
வறுமையை ஒழிப்போமும் ஒன்றுதான்!
அதனால்—
வெள்ளி விழாக்கள் வேறு வேறல்ல!

## சிதம்பரம் தாலுகாவில்

# விவசாய கூலி உயர்வு ஒப்பந்தம்

சிதம்பரம்: ஆக. 28— உழவடை கூலி உயர்வு சம்பந்தமாக சிதம்பரம் தாலுகாவில் சர்வகட்சி கூலி உயர்வு இயக்கம் நடைபெறுகிறது. இதில் கிள்ளை பகுதியில் 7 கிராமத்தில் சென்றாண்டு ஆண்களுக்கு ரூ 3-00ம் பெண்களுக்கு ரூ2-00என்ற கூலிவிகிதத்தை மிராஸ்தார்களுடன் நேரிடையாக பேசி ஆண்களுக்கு ரூ3-50 பெண்களுக்கு2-50 என்று கூலி உயர்வுதர ஒப்பந்தம்செய்யப்பட்டது அத்துடன் ஒருவேளை சாப்பாடும் உழக்குப்போடு போடப்படும்.

எண்ணுவரம் கரமேட்டில் ஆண் ரூ 3-00பெண் ரூ 2-00 என்றுள்ளதைஸ்தல மிராஸ்தார்களுடன் பேசி ஆண் ரூ. 3-75, பெண் ரூ 2-50 ஒருவேளை சாப்பாடு என்று ஒப்பந்தம் செய்யப்பட்டது.

நக்ரவர்தன்குடி, குமாரமங்கலம் கிராமத்தில் ஆண் ரூ2-00 பெண் ரூ1-50பெற்று வந்த கூலியை மிராஸ்தாரர்களுடன் சர்வகட்சி பிரதிநிதிகள் பேசி ஆண் ரூ. 3-00 பெண் ரூ 2-50 ஒருவேளை சாப்பாடு என்று ஒப்பந்தம் செய்யப்பட்டுள்ளது

### பெண்கள் படையெடுப்பு

தொரப்பாடி கிராமத்தில் கூலி உயர்வுதர மிராஸ்தார்கள் மறுத்ததால் நடவு நடும் பெண்கள் கூட்டமாக வந்து சிதம்பரம் தாசில்தாரிடம் மகஜர் கொடுத்து அதையொட்டி தாசில்தார் முன்னிலையில் நடந்த பேச்சு வார்த்தையில் ஆண்களுக்கு 9 லிட்டர் நெல் பெண்களுக்கு 5 லிட்டர் நெல் கூலி கொடுக்க ஒப்பந்தம் செய்யப்பட்டது.

முன்பு கூலி ஆண் 8 பெண் 4 லிட்டராக இருந்தது. அத்துடன் ஒரு வேளை சாப்பாடும் போட முடிவு செய்யப்பட்டது. இந்த பேச்சு வார்த்தையில் டி. ஆர். விஸ்வநாதனும் கஸ்பா பிர்கா வி. தொ. ச. தலைவர் ஜி கலியபெருமாளும் தொரப்பாடி வாத்தியாரும் கலந்து கொண்டனர்.

### நில வெளியேற்றத்தை எதிர்த்து இயக்கம்

ரசீது இல்லாமல் சாகுபடி செய்பவர்களை தாலுகாவில் பல இடங்களில் நிலத்தை விட்டு மிராசுதார்கள் நில வெளியேற்றம் செய்கிறார்கள். இதை எதிர்த்து சர்வகட்சி கூட்டு செயல் கமிட்டியும் - விவசாய சங்கமும், மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியும் போராடி வருகின்றன.

பெருங்கமலூர் கிராமத்தில் 5 சாகுபடிதாரர்களை மிராசுதார்கள் நில வெளியேற்றம் செய்ய முயற்சித்ததை டி. ஆர் விஸ்வநாதன் பிர்கா வி. ச. தலைவர் டி. கலியபெருமாள், செயலாளர் ஏ. கணபதி ஆகியோர் மிராஸ்தாரிடம் நேரில் பேசி சாகுபடிதாரருக்கு நிலம்விட ஒப்பந்தம் செய்யப்பட்டது அதே கிராமத்தில் 3குத்தகைதாரரையும் ராதாநெல்லூர் கிராமத்தில் 25 குத்தகைதாரரையும் நிலவெளியேற்றம் செய்ய மிராஸ்தார்கள் முற்பட்டுள்ளார்கள் அதை எதிர்த்து தொடர்ந்து இயக்கம் நடக்கிறது.

### நட்ட நடவை போலீசார் அழித்தனர்!

நஞ்சமகத்து வாழ்க்கையில் திருவரசர் என்ற குத்தகைதார் சாகுபடி செய்த நிலத்தை மிராஸ்தார் நில வெளியேற்றம்செய்ய முயற்சித்தார். அதை எதிர்த்து கிழக்கு பிர்கா விவசாய சங்கத்தின் கீழும் வலது கம்யூனிஸ்ட் சங்கத்தின் கீழும் உள்ள விவசாயிகளும் காங்கிரஸ் சங்க விவசாயிகளும் திரளாக திரண்டு நடவு நட்டனர். இரண்டுநாள்கழித்து மற்றவர்கள் வேலைக்குச் சென்றிருந்தபோது கிள்ளை போலீஸ் சப்இன்ஸ்பெக்டர் ரிசர்வு போலீசாருடன் மிராஸ்தார் ஆட்களும் வந்து நடவுநட்ட 3நாள் பயிரை பலாத்காரமாக அழித்துச் சென்றுள்ளார். அதை எதிர்த்து இயக்கம் நடைபெறுகிறது

தில்லைவிடங்கனில் ஒரு குத்தகைதாரரை நிலவெளியேற்றம் செய்ய முற்பட்டதை எதிர்த்து கிள்ளை விவசாயிகள் திரளாக சென்று நடவு நட்டுள்ளார்கள்.

### மறியல் போராட்டம்

மார்க்சிஸ்ட்கட்சி விவசாய சங்க முடிவுபடி 21-8-72 டி. ஆர் விஸ்வநாதன் தலைமையில் சிதம்பரம் ஆர். டி. ஓ. ஆபீசில் 64 பேர்கள் மறியல் செய்து கைதாகி இரவு 8 00 மணிக்கு விடுவிக்கப்பட்டனர் அன்று காலை டவுன்ஹாலில் இருந்து ஊர்வலமாக 500 விவசாயிகளுடன் மறியல் போராட்ட வீரர்கள் கிளம்பினர். ஊர்வலத்தை மாவட்ட கட்சிச் செயலாளர் எஸ். நடராஜன் துவக்கி வைத்து பேசி அனுப்பினர்.

22—8—72 இரண்டாம் நாள் மறியல் போராட்ட வீரர்கள் குமராட்சியில் இருந்து 10 மைல் ஊர்வலமாக வந்து சிதம்பரம் ஆர். டி. ஓ காரியாலயத்தில் மறியல் செய்து 64 பேர்கள் கைதாகி மாலை விடுவிக்கப்பட்டனர். இந்த ஊர்வலத்திற்கு குமராட்சி பிர்கா வி. ச. செயலாளர் டி. பெரியசாமியும் மன்னார்குடி பிர்கா வி. ச. செயலாளர் பி. எஸ். மகாலிங்கமும் தலைமை வகித்தனர்.

23—8—72-ம் நாள்நடைபெற்ற 3-ம் நாள் மறியலில் போராட்ட வீரர்கள் கிழக்கு பிர்கா கிள்ளையில் இருந்து 8 மைல் ஊர்வலமாக நடந்துவந்து ஆர். டி. ஓ காரியாலயம் முன்பு 50 பேர்கள் கைதானார்கள் கட்சியின் தாலுகா கமிட்டி உறுப்பினர் டி. அருள்பிரகாசம் கிழக்கு பிர்கா வி. ச. செயலாளர் டி. ராஜாராமன் தலைமையில் நடைபெற்றது.

### விவசாய சங்க கொடியேற்றுவிழா

சிதம்பரம் தாலுகாவில் கடந்த ஒரு வாரத்தில் புதிதாக எண்ணுவரம், பெருங்கமலூர், ராதாநெல்லூர், மேலவள்ளியூர், ஆகிய கிராமங்களில் விவசாய சங்கம் துவக்கப்பட்டுகொடியேற்றுவிழாக்கள் நடைபெற்றன. மறியல் போராட்டத்திற்கு சகோதர இயக்கங்களும் கட்சிகளும் ஆதரவளித்தன.

மூன்று நாள் மறியலுக்கு சிதம்பரம் தாலுகா ஆதிதிராவிடர் சங்க செயலாளர் கே. வெங்கடாசலம் டேவிட் ஆகியோரும் குடியரசு கட்சி தலைவர் சின்னையனும், சோசலிஸ்ட் கட்சி தலைவர் ஏ என் சுந்தரமும் நேரில் ஊர்வலம் கிளம்பும் இடத்திற்கு வந்தும் மறியல் நடைபெறும் இடத்திற்கு வந்தும் ஆதரவு தெரிவித்தனர்.

### போலீஸ் தர்பார்

ராதா நெல்லூர் கிராமத்தில் கடந்த ஒருவாரமாக நிலவெளியேற்றத்தை எதிர்த்துப் போராடும் சாகுபடிதாரர்களை புதூர் போலீசு நிலையத்திற்கு அழைத்துச்சென்று அடித்துள்ளார்கள் இது சம்பந்தமாக டி. ஆர். விஸ்வநாதன் டிப்டி சூப்பிரெண்டிடம் மகஜர் கொடுத்துள்ளார்.

## கோவை நகரசபைத் தலைவர் மீது நம்பிக்கையில்லாத் தீர்மானம்

# தி.மு.க.எதிர்ப்புக்கூட்டணியை ஆதரிக்காதது ஏன்?

கோவை, ஆக. 25— சென்ற நகர மன்றத் தேர்தலில் முற்போக்குக் கூட்டணி என்ற பேரால் தி.மு.க. இண்டிகேட், பி. சோ. தமிழரசுக் கழகம். முஸ்லீம் லீக், வலது கம்யூனிஸ்டுகள் ஒரு அணியாகவும், அதை எதிர்த்து சிண்டிகேட், சுதந்திரா, தமிழரசுக் கட்சி ஒரு அணியாகவும் இவ்விரண்டு அணிகளையும் எதிர்த்து மார்க்சிஸ்டு கம்யூனிஸ்ட் கட்சி தமிழ்நாடு முஸ்லிம் லீக் கூட்டாகவும் போட்டியிட்டன

### நகர் நல முன்னணி

எங்கள் கட்சி அபேட்சகர்கள் இருவரும் நாங்கள் ஆதரவளித்த சுயேச்சை ஒருவரும் ஆக 3 பேர்கள்வெற்றியடைந்தனர். முற்போக்குக் கூட்டணியில் உள்ள கட்சிப் பிரதிநிதிகள் 28 பேர்களும் சிண்டிகேட் கூட்டணியில் 9 பேர்களும் வெற்றிபெற்றனர்.

முற்போக்குகூட்டணியில் நகர் மன்றத் தலைவராக தி. மு. க. உறுப்பினர் சுக்கூர் அவர்களையும், உபதலைவராக வலதுகம்யூனிஸ்டு உறுப்பினர் பாண்டுரங்கம் அவர்களையும் தேர்ந்தெடுத்து நகர சபையை அமைத்தார்கள். சென்ற 20 மாதங்களாக தங்களிஷ்டம்போல் ஆண்டு வந்தார்கள்!

இப்பொழுது திடீரென்று முற்போக்குக் கூட்டணியும், சிண்டிகேட் சுதந்திரா பிற்போக்குக் கூட்டணியும் ஒன்றாகச் சேர்ந்து ஒரே பிற்போக்குக் கூட்டணியாகி "நகர நல முன்னணி" என்று நாமகரணம் செய்து திமுக நிர்வாகத்தின் மீது நம்பிக்கை இல்லாத் தீர்மானம் கொண்டு வந்தார்கள்.

### பதவிப் பங்கீடு

இதற்குக் காரணம் என்ன? முற்போக்கைப் பற்றித் தம்பட்டமடித்த இண்டிகேட், வலது கம்யூனிஸ்டுகளின் முற்போக்குக் கூட்டணி என்னவாயிற்று? படு பிற்போக்காளர்கள் என்று இவர்கள் வர்ணித்த சிண்டிகேட், சுதந்திராவுடன் எப்படிச் சேர்ந்தார்கள்?

இதுகுறித்து மக்கள் மத்தியில் கூறிபதில்லையே! தி மு க நிர்வாகம் ஊழல் நிறைந்தது என்கிறார்கள், இப்போது; இது முன்பு தெரியாதா? மார்க்சிஸ்டு கம்யூனிஸ்டுக்கட்சி 1968லிருந்தே தி. மு. க. கட்சியின் தவறுகளை, ஊழல்களை அம்பலப் படுத்தி வருகிறதே! அதனால்தானே அவர்களையும் உங்களையும் எதிர்த்து சுங்கங்களின் சொந்த பலத்தில், கொள்கை அடிப்படையில் நின்று போராடியது

நகரசபைத்தேர்தலிலும் சட்டமன்ற நாடாளுமன்றத்தேர்தலிலும் அன்றுமுற்போக்கு என்று கூறி இண்டிகேட். வலது கம்யூனிஸ்டுகள், திமுகவை தூக்கிப் பிடித்து, சிண்டிகேட் பிற்போக்கை எதிர்ப்பதாகக்கூறி பதவிகளைப் பங்குபோட்டனர்.

### சந்தர்ப்பவாதக் கூட்டணி

இப்போது அதே பிற்போக்கு சிண்டிகேட, சுதந்திராவுடன் சேர்ந்து திமுகவை ஊழல் என்றுகூறி, புதிய கூட்டணி அமைத்து பதவியையும், ஊழலையும் பங்குபோடத்தானே பார்க்கிறார்கள்! இது அப்பட்டமான அரசியல் சூதாட்டம் சந்தர்ப்பவாதம் அரசியலில் சூனியம் மக்களை மறந்து சுயநலம் காக்கும் வெத்து வேட்டுப் புரட்சி வாதம் தானே!

இதற்கு மார்க்சிஸ்ட்கட்சியின் ஆதரவை இவர்கள் கேட்டால் எப்படிக் கொடுக்க முடியும்? இண்டிகேட்—சிண்டிகேட் இரண்டு பிற்போக்குக் கூட்டணிகளையும் எதிர்த்துப்போட்டியிட்டு வந்தவர்கள் மார்க்சிஸ்ட் கட்சியினர். இன்று தங்கள் அரசியல் சூதாட்டத்திற்காக சிண்டிகேட்— இண்டிகேட் — வலது கம்யூனிஸ்டுகள் தங்கள் கொள்கைகளை காற்றில் பறக்கவிட்டுவிட்டுசந்தர்ப்பவாதக் கூட்டு சேருகிறார்கள்.

ஆனால் மார்க்சிஸ்ட் கட்சி தன் கொள்கைகளை மாற்றவில்லை, இவர்களின் கூட்டை ஆதரிக்கவுமில்லை. இவர்கள்கூட்டு சேர்ந்துள்ளதும் மக்களின் நன்மைக்காக அல்ல.

### மக்களுக்கு என்ன நன்மை

மக்களுக்காக இக்கட்சிகள் செயல்பட விரும்பினால் கோவை நகரத்தில் கல்வி அபிவிருத்தி, தண்ணீர் கஷ்டம் தீர்ப்பது, பாதாள சாக்கடை அமைத்தல், அநியாயவரி உயர்விலிருந்து ஏழை, நடுத்தரமக்களுக்குப்பாதுகாப்பு- படித்தும் வேலைகிடைக்காமலிருக்கும் பள்ளி ஆசிரியர்களுக்கு வேலை கொடுப்பது, குறைந்த வாடகையில் மக்களுக்கு குடியிருப்பு வசதி செய்வதுபோன்ற பிரச்சனைகளை மக்கள் முன் வைத்து சகல கட்சிகளையும் ஒன்றுபடுத்தி மக்களின் இயக்கத்தைக் கட்டி இருக்க முடியும்

### மார்க்சிஸ்ட் கட்சி துவக்கிய திட்டம்

இப்படிப்பட்ட இயக்கத்தைக்கட்ட மார்க்சிஸ்ட் கட்சி இவர்களை பலமுறை அழைத்துப் திரும்பிப் பார்க்கவில்லை இவர்களும் நடக்கவில்லை. 1964 லிருந்து-தோழர் எம் பூபதி யவர்கள் நகரசபைத்தலைவராக மார்க்சிஸ்ட் — திமுக கூட்டு நிர்வாகம் நடந்த காலத்தில் "பாதாள சாக்கடை" அமைக்க மத்திய மாநில அரசுகளிடம் அனுமதிபெற்று ஆரம்பித்ததும், சுமார் ஒருகோடி செலவில் இரண்டு சாக்கடைக் கண்ணீர் உபயோகப் பண்ணைகளை அமைக்கத் திட்டமிட்டு ஆரம்பித்து வைத்ததும். இவர்கள் நிர்வாகத்தில் முடக்கு வைத்தார்களா? இல்லை!

### இரண்டிலும் லஞ்ச ஊழல்

லஞ்ச ஊழல், நிர்வாகத்தில் பாரபட்சம் வேண்டியவர்களுக்கு உத்தியோகம், எதிர்க் கட்சிகளைப் பழிவாங்குவது ஆகியவை திமுக நிர்வாகத்தில் தலைவிரித்தாடுகிறது இவைகளை சென்ற காலத்தில் உண்டாக்கி வளர்த்தது காங்கிரஸ் கட்சிதான்! இன்று திமுக அதைப் பதுமடங்கு அதிகமாக்கியுள்ளது என்பதே உண்மை?

இந்த நிலைமையில் திமுகவை வீழ்த்தி விட்டு இந்தக் கூட்டணிக்காரர்கள் ஆட்சிக்கு வந்தால் ஊழல் திருமா? நன்மை பிறக்குமா? நிச்சயமாக நடக்காது. அதனால் தான் மார்க்சிஸ்ட் கட்சி இவர்களையும் ஆதரிக்க முடியாது. மக்களின் அந்த இயக்கத்தைக் கட்ட இந்த நகர நல முன்னணிக்காரர்களும் தயாராக இல்லை. அது வளர்ந்தால் இவர்களுக்கும் ஆபத்து.

மக்களின் இயக்கம்தான் நகரசபையில் யார் இருப்பது? யார் போவது? என்று முடிவு கட்ட வேண்டும்

"நகர நல முன்னணி" என்ற இந்த இண்டிகேட், சிண்டிகேட், வலது கம்யூனிஸ்ட் கூட்டணி மக்களின் இயக்கத்தை அப்படிக் கட்டத் தயாரில்லை. அவர்களின் முக்கிய நோக்கம் இந்திரா காந்தியின் திட்டத்தை எப்படி நிறைவேற்றுவது என்பதே

### மக்கள் இயக்கம்

அதற்கு ஒரு படியாக திமுக நகரசபை நிர்வாகங்களை தமிழகத்தில் எப்படிக் கவிழ்ப்பது என்பதே! அதற்கு கையாளாக மார்க்சிஸ்டு கட்சி சேரமுடியாது! திமுக நிர்வாகம் மக்களுக்கு எதிராகச் செய்து வரும் நடவடிக்கைகளை, ஊழலை எதிர்த்து மக்களைத் திரட்டி பேரியக்கம் நடத்தவும் போராடவும் தயார்! அந்த மக்கள் போராட்டம் தி.மு.க ஆள்வதா? மற்றவர்கள் ஆள்வதா? என்று முடிவு கூறட்டும். மக்களுக்கு விரோதமாக யார் நடந்தாலும் அவர்களை மக்...

(4 ஆம் பக்கம் பார்க்க)

# செய்திக் கதம்பம்

### சோபியா லோரன் நடிக்கும் புதிய பாத்திரம்

உலகப்புகழ் இத்தாலிய சினிமா நடிகை சோபியா லோரன் ஒரு புதிய பாத்திரத்தில் "நடித்திருக்கிறார்". இந்தப் புதிய பாத்திரத்தை அவருக்கு வழங்கியது எந்தச் சினிமாக் கம்பெனியும் அல்ல ஐ நா சபையின் உணவு — விவசாய ஸ்தாபனம் தான் இதனை அளித்துள்ளது இந்த ஸ்தாபனத்தின் இருபதாவது ஆண்டு விழாவை ஒட்டி. இந்த ஸ்தாபனம் ஒரு மெடலை வெளியிட்டு உள்ளது இந்த மெடலில், கையில் ஒரு கோதுமைக் கதிரைத் தாங்கிய வண்ணம் நிற்கும் ரோமாபுரித் தேவதையான செரெஸ் காட்சி தருகிறாள். இந்தத் தேவதையாகத் தான் சோபியா லோரன் போஸ் கொடுத்திருக்கிறார்;

### விவாகரத்து வாழ்த்துக்கள்

அமெரிக்காவில் விவாகரத்துக்கள் அதிகரித்துக் கொண்டே போகின்றன. சென்ற பத்தாண்டுகளில் விவாகரத்துக்களின் எண்ணிக்கை 33 சதவிகிதம் அதிகரித்து உள்ளது இவ்வாறு அதிகரித்து வரும் விவாகரத்துக்களைப் பயன்படுத்தி முதலெடுக்கவும் வியாபாரிகள் தயங்கவில்லை திருமணம், புத்தாண்டு. பிறந்தநாள், கிறிஸ்துமஸ் முதலியவற்றுக்கு வாழ்த்திதழ்கள் தயாரித்து வெளியிட்டு வரும் கம்பெனிகள் இப்போது விவாகரத்துக்கும்வாழ்த்திதழ்களைத் தயாரித்து வெளியிட்டு வருகின்றன 'உங்கள் விவாகரத்துக்கு எனது வாழ்த்துக்கள்' "மனைவியிடமிருந்து விடுபட்டு விட்டீர்களா?— நல்வாழ்த்துக்கள்" என்பன போன்ற வாசகங்கள் அந்த வாழ்த்திதழ்களில் காணப்படுகின்றன.

### தண்ணீர் வியாபாரம்

மேற்கு ஜெர்மனியில் குடிக்கும் தண்ணீரின் தரம் அத்தனை நல்லதாக இல்லை. மேலும் அங்கு இந்தக் கோடைப்பருவத்தில் வெப்பமும் அதிகம் எனவே அங்கு குடிதண்ணீர்தேவை அதிகரித்துவிட்டது. சாமர்த்தியசாலிகளான வியாபாரிகள் இந்தக் குடிதண்ணீர்த் தட்டுப்பாட்டையும் தமது லாப நோக்கத்தோடு பயன்படுத்திக் கொண்டுள்ளனர்.

போச்சும் நகரிலுள்ள ஒரு பெரிய பால் கம்பெனி. "குளோரின் சேராத சுத்தமான இயற்கைத் தண்ணீரை"ப் பாக்கெட்டுகளில் அடைத்து விற்றுவருகிறது. விலை சற்று அதிகம் தான். லிட்டருக்கு 45 பென்னிக்குகள். ரூர் பிரதேசத்தில் சிலமோசடிக்காரர்கள் சாதாரண நீரையே "பிரத்தியேக நீர்" என்று பெயரிட்டு புட்டிகளில் அடைத்து விற்றுவருகின்றனர். இதன் விலை இன்னும் அதிகம்—லிட்டருக்கு 1-30 மார்க்குகள்.

### மனோவசிய ஆயுதம்

பிரேஜில் நாட்டில் சிறையில் அடைபட்டிருந்த அலெக்சாந்தர்சாண்டோஸ் டி சில்வா என்பவர் மிகவும் குறுகிய காலத்தில் இருமுறை சிறையிலிருந்து தப்பியோடிவிட்டார் சிறையிலிருந்து தப்பியோட அவர் கையாண்ட ஆயுதம் என்ன தெரியுமா? ஹிப்னடிசம் என்னும் மனோவசியம்தான். முதலில் செல் வார்டரையும், பிறகு தலைமை வார்டரையும் கடைசியாக, அறை வாசலுக்கு வெளியே நின்ற காவலாளியையும் அவர் மனோவசிய முறையினால் மயக்கியே தப்பி ஓடினார். இரண்டு முறையும் அவர் கையாண்டது மனோவசியம் என்ற ஒரே ஆயுதம்தான்.

### பிஞ்சில் பழுத்தவன்

துருக்கியில் போதைப் பொருள்களைக் கடத்திய குற்றத்திற்காக திமோதி டேவி என்ற பிரிட்டிஷ் இளைஞனுக்கு ஆறேகால் ஆண்டு சிறைதண்டனை வழங்கப்பட்டிருக்கிறது.

(4-ம் பக்கம் பார்க்க)

# "தீக்கதிர்"

## ஏஜெண்டுத் தோழர்களுக்கு முக்கிய அறிவிப்பு

தோழர்களே,

தற்போது, ஏஜெண்டுகள் செலுத்தியுள்ள "டெப்பாசிட்" தொகை போதுமானது அல்ல என்று மாநில செயற்குழு கருதுகிறது.

எனவே, ஏஜெண்டுகள் அனைவரும் பிரதி ஒன்றுக்கு ரூ. 3—50 விதம் தங்களது "டெப்பாசிட்" தொகையை, அக்டோபர் 15-ம் தேதிக்குள் அனுப்பும்படி கேட்டுக் கொள்கிறோம்.

மதுரை,
14—8—72

மாநில செயற்குழு,
இந்திய கம்யூனிஸ்ட் கட்சி,
(மார்க்சிஸ்ட்)
தமிழ் மாநிலக் குழு.

## தமிழ்நாட்டில் புற்றுநோய் ஒழிப்பு

# சாத்தியக் கூறுகள் அதிகம்

## டாக்டர் அகஸ்ட்காரின்விளக்கம்

சென்னை-ஆக 25— "புற்று நோயாளிகளில் பெரு வாரியானவர்களுக்கு சிகிச்சை அளிப்பதற்கான சாத்தியக் கூறுகள் தமிழகத்தில் சிறப்பாக உள்ளன" என்று மாஸ்கோவிலுள்ள புற்று நோய் சிகிச்சைக் கேந்திரத்தின் தலைவரான டாக்டர் அகஸ்ட்காரின் எம். டி., பி. எச். டி கூறினார்.

காஞ்சீபுரத்தில் துவக்கப் பட்டிருக்கும் அறிஞர் அண்ணா நினைவு புற்றுநோய் கூடத்தை விரிவுபடுத்துவதற்கென, உலக சுகாதார ஸ்தாபனம் அனுப்பி வைத்துள்ள ஆலோசனை குழுவின் உறுப்பினராக வந்துள்ள டாக்டர் காரின் மாஸ்கோவிலுள்ள பரிட் சார்த்த புற்று நோய் சிகிச்சைக் கூடத்தில் உதவி இயக்குநரும் ஆவார். இக் குழுவின் பிற உறுப்பினர்கள் அமெரிக்க செல்லியல் நிபுணரான டாக்டர் தோப்ரோஸி, ஜப்பானிய புற்றுநோய் நிபுணரான டாக்டர் ஷிகுமதிஸா ஆகியோர்.

காஞ்சீபுரத்திலுள்ள பிராந்திய புற்றுநோய கேந்திரத்தைத் தவிர, சென்னையிலுள்ள பார்னார்டு ரேடியாலஜி கேந்திரத்திற்கும், பல வைத்தியக் கூடங்களுக்கும் தான் விஜயம் செய்ததாக டாக்டர் காரின் கூறினார். தனது பரிந்துரைகளை விரைவில், அரசாங்கத்திற்கும், உலக சுகாதார ஸ்தாபனத்திற்கும் அவர் வழங்கவிருக்கிறார்.

### ஆரம்பத்தில் சிகிச்சை செய்ய வேண்டும்

தமிழ்நாட்டில் புற்றுநோய் சிகிச்சைக்கான வாய்ப்புக்கள் பற்றிய அவரது கருத்தை விளக்குமாறு கேட்டபோது, அவர் கூறியதாவது: "இந்தப் பகுதியில் பிரதானமாக வாயிலும், கர்ப்பப் பையிலும் உண்டாகும் புற்றுநோயே காணப்படுகிறது,

அத்தகைய நோயை, ஆரம்ப நிலையிலேயே கண்டு பிடித்து விட்டால், அதற்குச் சிகிச்சையளிப்பது மிகவும் எளிது— ஆனால், துரதிருஷ்டவசமாக, 80 சதவிகித நோயாளிகள் முற்றிய பின்னரே சிகிச்சைக்கு வருகின்றனர்..." என்றார்.

தொற்று நோய்களைப் பொறுத்தவரை, அவற்றைப் பூரணமாக அழித்து ஒழிப்பது சாத்தியம்: ஆனால் உடல் திசுக்களில் ஏற்படும் மாற்றங்களின் விளைவாக ஏற்படும் புற்று நோயைப் போன்றவற்றை அறவே ஒழிப்பது என்பது முடியாத காரியம் தான், எனினும்கூட, உடலின் மேற்புறத்தில், உதாரணமாக, வாய், மார்பகம் போன்றவிடங்களில் ஏற்படும் புற்றுநோய், ஆரம்ப நிலையிலேயே கண்டுபிடிக்கப் பட்டு விட்டால், அவற்றை முழுமையாகக் குணப்படுத்தி விடுதல் சாத்தியம். உடலின் உட்புறத்தில் ஏற்படும் புற்றுநோயைக் காட்டிலும், வெளிப்புறத்தில் ஏற்படக் கூடியதைக்கண்டு பிடிப்பதில் சிரமம் ஏதும் இருக்கக் காரணம் இல்லை.

### 35 வித மருந்துகள்

இதுகாறும், புற்றுநோய்க்கான 35 மருந்துப் பொருள்கள் சர்வதேச ரீதியில் கண்டுபிடிக்கப்பட்டு விற்பனை செய்யப்பட்டு வருகின்றன. எனினும் இந்தியாவில் 4 அல்லது 5 மருந்துகளே வரவழைக்கப்பட்டு பயன்படுத்தப்பட்டு வருவதாகத் தெரிகிறது

"புற்று நோயின் மிச் சிக்கலான உயிரியல் தன்மையை கருத்தில்கொண்டு பார்க்குங்கால், கிடைக்கக் கூடிய மருந்துகள் அனைத்தையும் பயன்படுத்திப் போராடினால் தான் வெற்றிகரமான விளைவுகள் ஏற்படும்" என்கிறார் டாக்டர் காரின்.

### வைரஸ்களினால் புற்றுநோய்

வைரஸ்களினால்தான் புற்றுநோய் உண்டாகிறதா என்று வினவியபோது, டாக்டர் காரின் கூறியதாவது:—

'மனிதர்களிடையே தோன்றும் இரத்தப் புற்றுநோயிலிருந்து தனித்தெடுக்கப்பட்ட சாற்றை, குரங்குகளுக்குச் செலுத்திப் பரிட்சித்ததில், அவற்றிற்கும் இரத்தப் புற்றுநோய் ஏற்படுவது தெரிய வந்துள்ளது. எனவே, இவ்வகைப் புற்றுநோய், 'வைரஸ்' களினால்தான் ஏற்படுகிறதுஎனக் கூறுவதற்குப் போதுமான ஆதாரங்கள் சேகரிக்கப்பட்டுள்ளன, என்றாலும்,குரங்குகளிடம் நோயை ஏற்படுத்தக்கூடிய அந்த 'வைரஸ்' கள் மனிதனிடம் ஏற்படுத்துமா என்று பரிசிலனை செய்வது கடினம். சில வகைப் புற்று நோய்களையேனும் தடுப்பதற்கு இன்னும் சில ஆண்டுகளில் 'வாக்ஸீன்' ஒன்றைக்கண்டு பிடித்துவிட முடியும் என்று நான் நம்புகிறேன்", என்றார் டாக்டர் காரின்.

### புற்று நோயிலிருந்து 10 லட்சம் பேர் குணம்

இந்த சந்தர்ப்பத்தில், மாஸ்கோவில்தான் பணியாற்றும் புற்றுநோய் கூடத்தைப்பற்றிக் குறிப்பிட்டு, ஐரோப்பாவிலேயே இது மிகப் பெரிது என்றார் தற்போது, அதில் 1700 பேர் பணியாற்றுகின்றனர்; 1975ம் ஆண்டிற்குள்ளாக 4500பேர் பணியாற்றுவர்" என்றார் அவர்.

சோவியத் நாட்டில் தற்போது, 10 லட்சத்து 60 ஆயிரம் பேர் புற்றுநோயினின்றும் பூரணமாகக் குணமடைந்து சகஜ வாழ்வு வாழ்ந்து வருகின்றனர். சிகிச்சை பெற்றபின்னர் 5 ஆண்டு காலத்திற்கு, நோயாளி தொடர்ந்து கவனிக்கப்பட்டு வருகிறார்.

நோயாளியிடம் பெரும்பாலும், சோவியத் டாக்டர்கள், அவர்கள் புற்றுநோயால் பீடிக்கப்பட்டிருப்பதாகத் தெரிவிப்பதில்லையாம், உடனடியாக சிகிச்சையளிக்கப்படாவிடில், அது புற்றுநோயாக மாறும் அபாயம் உள்ளது என்றே கூறி சிகிச்சையளிப்பதாக, டாக்டர் காரின் தெரிவித்தார். "புற்று நோயால்ஒருவர் பீடிக்கப்பட்டிருப்பதாகக் கூறினால். சில உளவியல் ரீதியான சிக்கல்கள் ஏற்படக் கூடும்' என்றுகிறார் டாக்டர்காரின்.

# மார்க்சிஸ்ட்-தி. மு. க. கூட்டு?—(4)



## ஏ. பாலசுப்ரமண்யம்

### தி. மு. க. வின் பேரம்

திமுக ஒரு முதலாளித்துவக் கட்சியாக இருப்பதால், தனி உடைமைச் சுரண்டலை ஆதரிக்கும் கட்சியாக இருப்பதால், அடிப்படையில் காங்கிரசுக்கு மாற்றான கொள்கை இல்லாததால், நடைமுறையில், மக்களைத் தாக்குகிறது இதன் விளைவாக ஜனநாயக நிலைகளில் உறுதியாக நின்று, மக்களைத் திரட்டி மத்திய அரசை எதிர்க்க முன்வருவதில்லை.

மாநில அரசுக்கும் மத்திய அரசுக்கும் இடையில் எழும் மோதல்களை "பேசி தீர்த்துக் கொள்ளலாம்" என்றுநம்புகிறது 'தேவைப்பட்டால், நிர்ப்பந்த பேரம்" செய்ய முற்படுகிறது. உதாரணமாக இண்டிகேட் காங்கிரஸ், மனமுடியார் தலைமையில் நடத்தப்பட்ட "விவசாயிகள்" கிளர்ச்சியில் பங்குகொண்டபொழுது, திமுக தலைமை என்ன சொல்லிற்று? "இந்திரா காங்கிரஸ் இந்தக் கிளர்ச்சியில் இருந்து பின்வாங்கவில்லை என்றால், மண்எண்ணெய்மீதும் உரத்தின் மீதும் போடப்பட்ட புதிய வரிகளை எதிர்த்து டில்லியிலே நாங்கள் மறியல் செய்வோம்" என்று கூறியது.

இதன் பொருள் என்ன? நாங்கள் போடும் வரிகளை நீங்கள் எதிர்த்தால் நீங்கள் போடும் வரிகளை நாங்கள் எதிர்ப்போம் நீங்கள் எதிர்ப்பு காட்டாமல் இருந்தால், நாங்களும் எதிர்ப்புக்காட்டாமல் இருப்போம். பாதிக்கப்படும் மக்களைபற்றி கவலையில்லை! பேரம்பேசி சகவாழ்வு நடத்துவது!

அதேபோல், திமுக ஆட்சியில் நடந்த துப்பாக்கிச் சூடுகள் அடக்குமுறைகள் பற்றி விசாரித்தறிய காங்கிரஸ் எம். பி.க்கள் தூதுகோஷ்டி வந்தால், காங்கிரஸ் ஆட்சி நடக்கும் மாநிலத்தில் நடந்த துப்பாக்கிச் சூடுகள், அடக்குமுறைகள் பற்றி விசாரிக்க திமுக எம். பி.க்களை தூதுகோஷ்டி போகும்! நான் சுடுவதைபற்றி நீ கண்ணை மூடிக்கொண்டால் நீ சுடுவதைப் பற்றி நானும் கண்ணை மூடிக்கொள்வேன்!

### நமது வழி

இந்நிலைகளிலிருந்து எழுகிறது நமது வழி. நமது பிரதான எதிரியான இந்திரா அரசை எதிர்த்து, நமது மாற்று ஜனநாயகக் கொள்கைகளைக் குறிப்பின் அனைத்து ஜனநாயக சக்திகளையும் திரட்டிப் போராடுவது நமது முதல் கடமை

அவ்வாறு, மாற்று ஜனநாயகக் கொள்கைகளுக்காக நாம் போராடும்பொழுது, அதன் ஒரு பகுதியாகவே திமுகவின் கொள்கைகளையும் எதிர்த்தாகவேண்டியுள்ளது. ஏனெனில் நடைமுறையில் அவர்களது கொள்கைகளும் காங்கிரசின் கொள்கைகளை ஒட்டியதே. மக்களைத் தாக்கும் கொள்கைகளாகவும் அவற்றுடன் இணைந்த ஜனநாயக விரோத நடைமுறைகளாகவும் இருப்பதால், இவற்றை எதிர்ப்பதும் நமது கடமையாகிறது. எதிர்ப்பது என்றால், வெறும் பிரசாரத்தின் மூலம் மட்டும் எதிர்ப்பது என்பதல்ல உழைக்கும் மக்களது ஒன்றுபட்ட வெகுஜனப் போராட்டங்களைக் கொண்டே எதிர்த்தாக வேண்டும் இவ்வாறு போராடுவது நமக்கு மிக அவசியமான கடமையாகிறது.

### காங்கிரசையும், தி. மு. க. வையும் எப்படிப் பார்க்கிறோம் ?

அப்படி என்றால், இரண்டையும்—இந்திரா அரசையும் திமுக அரசையும்—ஒரேநிலையில் வைத்து, ஒரே அளவில் எதிர்க்கிறோமா? இல்லை என்பதே நமது பதில் ஏற்கனவே நாம் குறிப்பிட்டுள்ளபடி. நமது கட்சியின் திட்டம் தெளிவாக்கியுள்ளபடி. இந்திரா காங்கிரசும் அதன் அரசுமே நமது பிரதான எதிரி; நாம் ஒழித்துக்கட்ட வேண்டிய எதிரி; பெரு முதலாளிகளது தலைமையில் உள்ள முதலாளித்துவ நில பிரபுத்துவ சக்திகளின் பிரதிநிதி.

தி. மு க.வையும் அதன் தமிழக அரசையும் நாம் அவ்வாறு கருதவில்லை. ஆனால் அதனுடைய கொள்கைகளும் நடைமுறைகளும் இந்திராவை எதிர்த்து, மக்களைத் திரட்ட உதவக்கூடியவைகளாக இல்லை மாறாக மக்களைத் தாக்குகின்றன மக்கள் மத்தியில் கசப்பையும் ஆத்திரத்தையும் வளர்த்துக் கொண்டிருக்கின்றன.

சொல்லப்போனால், இந்திரா காங்கிரசின் சூழ்ச்சிகள் தமிழ் நாட்டில் விலை போகும் நிலையை உண்டாக்குகின்றன. இந்திய மக்களின் பிரதான எதிரியான இந்திரா காங்கிரசைப்பற்றி புதிய பிரமைகளை இவர்களே வளர்க்கின்றனர்— இந்திராவின் "முற்போக்கு" பற்றியும் 'சோஷலிசம்" பற்றியும் இவர்களே பிரசாரமும் செய்கின்றனர்.

இந்நிலையில் இந்திரா காங்கிரசை எதிர்த்து மக்களைத் திரட்டவே இவர்களையும் எதிர்த்தாக வேண்டியுள்ளது. ஆனால் இந்திரா அரசை எதிர்ப்பது அதனை ஒழித்துக்கட்ட. திமுகவை எதிர்ப்பது அதன் தவறான கொள்கைகளைக் கைவிடச் செய்து மாற்றுக்கொள்கைகளை மேற்கொள்ளச் செய்ய. நாம் கடைப்பிடிக்கும் வழிமுறைகள் இந்த அடிப்படைக் கண்ணோட்டத்தில் இருந்து எழுகின்றன. இந்த அடிப்படையில நின்று கொண்டே, நேரம், காலம், மக்கள் உணர்வு ஆகியவைகளைக் கணக்கில் கொண்டு தேவையான காரியத்தைச்செய்கிறோம்.

### நமது நிலைபாடு

— 1967 பொதுத் தேர்தல் சமயத்தில் காங்கிரசின் அதிகார ஏகபோகத்தை முறிக்க, திமுகவுடன் தொகுதி உடன்பாடு செய்துகொண்டோம்; திட்டத்தின் அடிப்படையில் கூட்டணி அமைக்கவில்லை வலதுகள் அப்பொழுது திமுகவை "வலதுசாரிப்" பிற்போக்குக் கட்சி என்றனர்

— 1970 ஆரம்பம் வரை, திமுக அரசை விமர்சனம் செய்துகொண்டே அதை எதிர்த்து கிளர்ச்சிகளையும் போராட்டங்களையும் நடத்திக்கொண்டே, உறவை அறுத்துக்கொள்ளாமல் இருந்தோம்.

— 1970 ஜூன் மாதக் கடைசியில், திமுக திருந்தாததாலும், காங்கிரசின் கொள்கைகளை ஒட்டியே முதலாளித்துவப் பாதையில் உறுதியாகப் போவதாலும், இனிவர இருக்கும் உபதேர்தல்களில் ஆதரிக்கமாட்டோம் என்றோம்.

— 1971 ஜனவரியில் திமுக, இந்திரா காங்கிரசுடன் சேர்ந்து கூட்டணி அமைத்தது. நமது பிரதான எதிரியுடன் சேர்ந்துவிட்டதால் அதை முழு மூச்சுடன் எதிர்ப்பதைத்தவிர வேறு வழியில்லை என்று முடிவு செய்தோம் நாம் ஆனால், அப்பொழுது வலதுகள் திமுகவை ஒரு 'முற்போக்குக் கட்சி" என்றும் "இடதுசாரி கட்சி" என்றும் போற்றினர்கள்.

— இன்று, 1972-ன் நடுவில், இந்திரா கட்சிக்கும் தி. மு. க வுக்கும் "டைவர்ஸ்". தி மு க வை எதிர்த்து ஒழிக்க. முடிந்தால் அதன் அரசை, எப்படியாவது கவிழ்க்க புதிய கூட்டணி! இந்திரா காங்கிரசின் ஒரு ஒரு கட்சி சர்வாதிகாரத்துக்கான முயற்சிகள். இந்திரா கட்சிக்கும் அதன் மத்திய, அரசுக்கும் தி மு கழகத்துக்கும் அதன் மாநில அரசுக்கும் முரண்பாடுகள் அதிகரிக்கும். இந்நிலையில், எதிர்க்கவேண்டிய தி மு. க. வின் கொள்கைகளையும் நடைமுறைகளையும் எதிர்த்துப் போராடிக் கொண்டே, இந்திரா காங்கிரசின் பேரபாயத்தைக் சுட்டிக்காட்டி அதனை உறுதியாக எதிர்த்து சமாளிக்க வேண்டும் என்றால், தி மு க. வின் கொள்கைகள்—குறிப்பாக உழைக்கும் மக்கள்பால் உள்ள கொள்கைகள்—மாற வேண்டும் என்று வற்புறுத்துவோம். அவ்வாறு மாறாத வரையில், நாம் அவர்களை ஆதரிப்பது என்ற பேச்சுக்கே இடமில்லை என்று கூறுகிறோம். அவர்கள் போக்கில் சென்றால் இந்திராவைத்தான் அவர்கள் பலப்படுத்துவார்கள் என்று எச்சரிப்போம். இதுவே நமது வழி,

— முற்றும் —

---

❖ வேலையில்லாத் திண்டாட்டத்தை எதிர்க்க

❖ முந்திரிப்பருப்பு தொழிற்சாலைக்குத் தேவையான முந்திரிக் கொட்டையை மத்திய அரசு வழங்கிட

❖ முந்திரிப் பருப்பு தொழிற்சாலைகளில் தொழிலாளர் நலச் சட்டங்களை அமுலாக்கிட

# முந்திரிப் பருப்புத் தொழிலாளர் போராட்டம்

விளவங்கோடு, ஆக. 25—

படித்தவர்களின் வேலையில்லா திண்டாட்டத்திற்கு பெயர் பெற்ற குமரி மாவட்டத்தில் சுமார் 140க்கும் அதிகமான முந்திரிப்பருப்பு தொழிற்சாலைகள் பல வருடங்களாக இயங்கி வருகின்றன இத்தொழிற்சாலைகளில் வேலை பார்க்கும் சுமார் 50 ஆயிரத்துக்கும் அதிகமான பெண் தொழிலாளர்கள். தங்களுக்கு தகுந்தகூலி கிடைக்க திருந்தும், கிடைக்கின்ற மிகக் குறைந்த கூலியைக் கொண்டுவாழ்ந்து வருகின்றனர்.

#### அடக்குமுறை

எந்தவித தொழில் நல சட்டங்களும் தங்களது தொழிற்சாலைக்குள் அமுல்படுத்தாமல்-ஏழைத்தொழிலாளிகளின் வறுமையை பயன்படுத்தி அவர்களது உழைப்பை கொள்ளையடிப்பதையே குறிக்கோளாகக் கொண்டுள்ள இந்த முதலாளிகள், தொழிலாளரின் அடிப்படை உரிமையான சங்கம் வைக்கும் உரிமையைக்கூட அனுமதிப்பதில்லை தொழிலாளர்களை பயமுறுத்தி பணிபவைத்து பழிவாங்கப் பார்க்கிறார்கள் அவர்கள் மீது அடக்குமுறை கட்டவிழ்த்துவிடப் படுகிறது.

#### உரிமைகள் வழங்க மறுப்பு

காலை 6 மணியிலிருந்து மாலை 6 மணி வரையிலும், இடைவேளையின்றி வேலை செய்யும் தொழிலாளர்களுக்கு 20 காசிலிருந்து சுமார் ஒன்றரை ரூபாய் வரைதான் தினக் கூலியாக கிடைக்கிறது. இதுவரை குறைந்தபட்ச கூலி நிர்ணயம் செய்யப்படவில்லை போனஸ், பண்டிகைகால முன்பணம், விடுமுறைநாள் ஊதியம், பிரசவகால சலுகைகள், மருத்துவ வசதி பிராவிடண்ட் பண்டு, கிராஜுவிட்டி போன்ற எந்தவித உரிமைகளையும் இவர்கள், தொழிலாளர்களுக்கு வழங்குவதில்லை.

இவற்றையெல்லாம் பொறுத்து கிடைப்பதை வைத்து வாழலாமென்றால் போதுமான அளவு முந்திரிக் கொட்டை இல்லை என்ற காரணத்தினால் எந்தவித முன்னறிவிப்புமின்றி மாதக்கணக்கில் அடிக்கடி தொழிற்சாலைகளை மூடிவிடுகிறார்கள். அப்படி மூடுவதால், தொழிலாளர்களுக்கு வழங்கப்பட வேண்டிய ஊதியமும் கொடுப்பதில்லை.

இன்றிருக்கின்ற இந்த தொழிற்சாலைகள் ஆரம்பிக்கப்பட்டு சுமார் 10 வருடங்கள் கடந்துவிட்டன நாளொன்றுக்கு ஒவ்வொரு தொழிற்சாலையிலும குறைந்தபட்சம் 40 மூடையிலிருந்து 70 மூடை வரையிலும் முந்திரிக்கொட்டையை வைத்து வேலை நடைபெறுகிறது மிகப் பெருமளவில் தமிழ்நாட்டிற்கு அன்னிய செலாவணியை தேடித்தரும் இத் தொழிலை இப்பிரதேசத்தில் நிலைநாட்டுவதன் மூலம் தொழிலாளர்களுக்குவேலை வாய்ப்பு கிடைப்பது மட்டுமல்லாது, நாட்டினை பொருளாதார நெருக்கடியிலிருந்து பாதுகாக்கவும் முடியும் என்பது இத்தொழிலின் சிறப்பம்சமாகும்.

மத்திய அரசு அமைத்துள்ள (சென்ட்ரல்டிரேடிங் கார்ப்பரேஷன்)-லிருந்துதான் தேவையான அளவு முந்திரிக்கொட்டை கேரள மாநிலத்துக்குக் கிடைக்கிறது. அதுபோல் தமிழக அரசும்நமதுமாநிலத்திற்குத் தேவையான முந்திரிக் கொட்டையின் கோட்டாவை மத்திய அரசிடமிருந்து கேட்டு வாங்கி இத் தொழிற்சாலைகளுக்கு வினியோகம் செய்தாக வேண்டும்.

இத்தொழிலைநம்பிவாழும் எண்ணற்ற ஏழைத் தொழிலாளர்களின் வாழ்விற்குத் தமிழக அரசு உடனடியாக தகுந்த நடவடிக்கைகள் மேற்கொள்ள வேண்டும்.

மேற்கண்டவாறு சங்கத் தலைவர் ஜி. எஸ். மணியும் செயலாளர் கோபிதாஸும் அறிக்கை விடுத்துள்ளனர்.

---

வெள்ளக்கிணறு விவசாயத் தொழிலாளிகளுக்கு ஆதரவாக

# இன்சினீரியங் பஞ்சாலை - தொழிலாளர்கள் ஆர்ப்பாட்டம்

கோவை, ஆக 25—

வெள்ளக்கிணறு கிராமத்தில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி தலைமையில் விவசாயத் தொழிலாளர்கள் சங்கத்தை ஏற்படுத்தி இயக்கம் நடத்தி போராடிய பின். பெண்களுக்கு ரூ 2-கூலியும் ஆண்களுக்கு ரூ 4 கூலியுமாக உயர்வு பெற்றனர்.

#### நிலப்பிரபுக்கள் சதி

போராடிப் பெற்ற இந்த உரிமையைப் பறிக்க நிலப் பிரபுக்கள் கூலிக் குறைப்புச் செய்ததை எதிர்த்து சென்ற 18-8-72 லிருந்து 1000க்கு மேற்பட்ட விவசாயத் தொழிலாளிகள், உறுதியாகப் போராட்டம் நடத்திவருகின்றனர். போராடும் விவசாயத் தொழிலாளிகள் ஒரே கூட்டாக நின்று தினசரி ஊர்வலமாகச் சென்று மிகப்பெரிய நிலப்பிரபு ஆன மாஜி மந்திரி வி. சி பழனிசாமிகவுண்டர் குடும்பத்தினரின் பங்களாக்களுக்கு முன்பும் தோட்டங்களுக்கு முன்பும் ஆர்ப்பாட்டங்கள் நடத்துகின்றனர்.

இதேபோல் இதர நிலப்பிரபுக்களின் தோட்டங்களுக்கு முன்பும் பங்களாக்களுக்கு முன்பும் ஆர்ப்பாட்டம நடத்துகின்றனர். வெளியூரிலிருந்து டிராக்டர்களிலும், லாரிகளிலும் போராட்டத்தை உடைக்க, கூலியாட்களை கொண்டுவருவதை ஆங்காங்கு ரோடுகளில் லாரிகளைத் தடுத்தும் மறியல் செய்தும் லாரிகளில் ஆட்களைக் கொண்டு வருவதைப் பூரணமாகத் தடுத்து நிறுத்தினர்.

விவசாயத் தொழிலாளர் போராட்டத்தை உடைக்க நிலப் பிரபுக்கள் எடுக்கும், இந்த நடவடிக்கையை முறியடிக்க சத்தி ரோடிலுள்ள பஞ்சாலைத் தொழிலாளர்களும் இஞ்சினீயரிங் தொழிலாளர்களும்- அதே போல் மேட்டுப்பாளையம் ரோட்டிலுள்ள பஞ்சாலைத் தொழிலாளர்களும், இஞ்ஜினீயரிங்தொழிலாளர்களும் ஒத்துழைத்தனர். பல முன்னணி தோழர்களும், தொடர்ந்து லீவு போட்டும் நேரிடையாக விவசாயத்தொழிலாளர் போராட்டத்தில் பங்கு கொண்டும் செயல்படுவதுடன், ஷிப்டு வாரியாக பல நூற்றுக்கணக்கான தொழிலாளிகள் வெள்ளக்கிணறு கிராமத்திலும் சுற்றியுள்ள கிராமங்களிலும் முகாமிட்டு நிலப்பிரபுக்கள், அடியாட்களைக் கொண்டு வருவதை தடுத்து நிறுத்தி முறியடித்தனர். 1000-க்கு மேற்பட்ட விவசாயத்தொழிலாளிகள் (இந்து, ஹரிசனன் என்று பாராமல்) நிலப் பிரபுக்களது நடவடிக்கையை முறியடிக்க உறுதியாக நின்று போராடுகிறார்கள்,

#### நிலப்பிரபு கலக்கம்

தினசரி பஞ்சாலை, இஞ்ஜினீயரிங் தொழிலாளர்களும் மாலை நேரத்தில் நூற்றுக்கணக்கில் திரண்டு வெள்ளக்கிணறு கிராமத்தில் ஆர்ப்பாட்டம் செய்கிறார்கள். இன்று டெக்ஸ்மோ இன்ஜினியரிங்தொழிலாளிகள் 300பேர் திரண்டு வெள்ளக்கிணறு கிராமத்தில் மிகப்பெரிய ஆர்ப்பாட்டத்தை நடத்தினர். விவசாயத்தொழிலாளர்களுக்கு ஆதரவாக யந்திரத்தொழிலாளி வர்க்கம் திரண்டு ஆர்ப்பாட்டம் நடத்துவதைக் கண்டு நிலப் பிரபுக்கள் மத்தியில் மிகப்பெரிய கலக்கம் ஏற்பட்டுள்ளது

கிராமப்புறத் தொழிலாளி வர்க்கத்தின் மத்தியில் இருந்து தனிமைப்படுத்தப்பட்ட நிலப்பிரபுக்கள் தங்களுக்கு பங்களாக்களைப் பாதுகாக்க போலீஸ் உதவியை நாடியுள்ளனர்; போராடும் தொழிலாளிகள் தங்களுடைய கூலி உயர்வை மீண்டும் நிலை நிறுத்துவதற்காக உறுதியாகப் போராடி வருகிறார்கள். பட்டினியால் பாதிக்கப்படக்கூடிய குடும்பங்களை பராமரிக்க பக்கத்துக் கிராமங்களிலுள்ள விவசாயத் தொழிலாளிகளும், இதரத் தொழிலாளிகளும் அரிசி, ராகி சோளம் போன்ற தானியங்களை வசூலித்தும், அத்துடன் நிதியும் வசூலித்தும் உதவி செய்து வருகின்றனர்.

வெள்ளக்கிணறு விவசாயத் தொழிலாளருடைய போராட்டம். அக்கிராமத்தைச் சுற்றியுள்ள பல கிராமங்களிலுள்ள விவசாயத் தொழிலாளிகளுக்கு ஊக்கத்தையும் உற்சாகத்தையும் அளித்துள்ளது. பலகிராமங்களில்விவசாயத் தொழிலாளிகள், நூற்றுக்கணக்கில் விவசாயத் தொழிலாளர் சங்கத்தில் உறுப்பினராகச் சேர்ந்து சங்கங்களை உருவாக்கி வருகின்றனர்.

---

# கோவை நகரசபைத் தலைவர்...

(3-ம் பக்கத் தொடர்ச்சி)

கள் வீழ்த்துவார்கள் என்பதில் சந்தேகமில்லை.

#### பொறுமையால் ஏச்சு

இந்தக் கொள்கை நிலையிலிருந்துதான் மார்க்சிஸ்ட் கட்சியும் அதன் நண்பர்களும் கோவை நகரசபையில் நடுநிலைவகித்து இவ்விரு கூட்டத்தாருக்கும் ஓட்டளிக்கவில்லை.

இதனால்கோபமும்பொறுமையும் கொண்டு சிண்டிகேட், இண்டிகேட் வலது கம்யூனிஸ்டுகள் வாய் புளித்ததா? மாங்காய் புளித்ததா? என்று நமது கட்சியை ஏசிவருகிறார்கள்!

#### பதவி ஏலம்

அவர்களின் போக்கு எவ்வளவு கீழ்த்தரமானது என்பதற்கு உதாரணம், கடைசி கட்டத்தில் மார்க்சிஸ்டுக் கட்சியை அணுகி "நகரமன்றத் தலைவா பதவியை" உங்களுக்குத் தருகிறோமென்று ஆசைகாட்டி, ஏலம் போட்டுப் பார்த்தார்கள்! 2 அங்கத்தினர்கள் உள்ள மார்க்சிஸ்ட் கட்சி தலைவர் பதவியை ஏற்பதாம்! அதை அவர்கள் சப்ளை செய்து காப்பாற்றுவார்களாம்!

#### மக்கள்பக்கமே மார்க்சிஸ்ட் கட்சி

இதிலிருந்து இக் கட்சிகளின் அரசியல் சூதாட்டம் எப்படிப்பட்டதென்று பொது மக்கள் புரிந்துகொள்ளலாம், மார்க்சிஸ்ட் கட்சியும் அதன் ஆதரவாளர்களும் ஒருக்காலும் இப்படிப்பட்ட சூதாட்டத்திற்கு இரையாகார! கோவை நகர மக்களுக்காக நகரத்தில் நல்ல நிர்வாகம் நடைபெறப் போராடுமென்று உறுதிகூற விரும்புகிறோம்!

மேலும் மார்க்சிஸ்ட் கட்சியின் இம்முயற்சிகளுக்கும் நடவடிக்கைகளுக்கும், நகர பொது மக்களும், தொழிலாளர்களும், பூரண ஆதரவும் ஒத்துழைப்பும் கொடுத்து உதவும்படி கேட்டுக் கொள்கிறோம்.

— ந. நி )

---

# செய்திக்கதம்பம்....

(3-ம் பக்கத் தொடர்ச்சி)

57 பவுண்டு எடையுள்ள சஞ்சாவைக் கடத்தி வந்து விற்க முயன்றான் என்பதே அவன் மீது சாட்டப்பட்ட குற்றம்.

இந்த இளைஞன் ஒரு பள்ளி மாணவன். வயது என்ன தெரியுமா? பதினைந்து!

#### குடித்தது ஏன்?

சான் பிரான்சிஸ்கோ நகரில் ஒரு போலீஸ்காரர் குடிப்பழக்கத்துக்கு உள்ளாகிவிட்டார் அன்றாடம் அவரால் ஒரு புட்டி விஸ்கியை உள்ளே தள்ளாமல் இருக்க முடியவில்லை. அவரைப் பரிசோதித்த மருத்துவ அதிகாரிகள் அவருக்கு ஓராண்டுக்காலம் சம்பளத்தோடு லீவு கொடுக்கவேண்டும் என்று சிபாரிசு செய்தனர். அதன்படி அவருக்கு லீவும்கிடைத்தது. அந்தப் போலீஸ்காரருக்கு இத்தகைய நீண்ட லீவை மருத்துவ அதிகாரிகள் சிபாரிசு செய்ததற்கு அவர்கள் கூறிய காரணம் என்ன தெரியுமா? கடினமான வேலைப்பளுவின் காரணமாகத்தான் அந்தப் போலீஸ்காரர் குடிப்பழக்கத்துக்கு ஆளாகிவிட்டார் என்றே அவர்கள்கூறியிருந்தனர்.

#### கலைத் திருடர்கள்

சிலைகள், ஓவியங்கள் முதலிய கலைப் படைப்புக்களை திருடும் திருட்டு பிரான்ஸ் நாட்டில் அதிகரித்து விட்டது. 1971 இல் 3010 கலைத் திருட்டுக்கள் நடந்திருப்பதாக போலீசார் பதிவு செய்துள்ளனர்.

36 காட்சிக் கூடங்கள் 217 தேவாலயங்கள் மற்றும் பலரது வீடுகள் ஆகியவற்றிலிருந்தே இத்தகைய பொருள்கள் திருடப்பட்டன,

---

# செங்கோட்டை மில்லை அரசு ஏற்று நடத்த வாய்ப்பு

## முதலாளி சர்மாவின் தில்லுமுல்லு பலிக்காது

மதுரை, ஆக. 25—

செங்கோட்டை பலராம வர்மா மில்லை ஏற்று நடத்துவதென்று மத்திய அரசு நிறுவனமாகிய தேசிய பஞ்சாலைக் கழகம் தீர்மானித்துள்ளதாகத் தெரிகிறது.

இதற்கான இறுதி உத்தரவுகள். பிறப்பிக்கப்படும் தருவாயில், உள்ளன என்றும அறிகிறோம்,

இந்த மில்லின் உற்பத்தி சக்தியை விரிவு படுத்த வாய்ப்புள்ளது என்று தொழில் நிபுணர் கமிட்டி சிபாரிசு செய்துள்ளது. விரிவுபடுத்துவதற்கு ஆகும் செலவையும் அனுமதிப்பதென்று வெளிநாட்டு வர்த்தக அமைச்சக அலுவலகம தீர்மானித்துள்ளதாக அறிகிறோம்.

#### அரசு அதிகாரிகளைக் கொண்டு சதி

அந்த விவரங்களையெல்லாம தனது கையாட்களின் மூலம அறிந்த முதலாளி சர்மா. அரசு உத்தரவு பிறப்பிக்கப்படுவதற்கு முன்பு, இந்த மில்லை தானே ஓட்டிவிட வேண்டுமென்று தீவிரமாக முயற்சிக்கிறார்.

இதற்காக திருவனந்தபுரத்திலிருந்து ஆட்களைக் கொண்டுவந்து மில்லுக்குள் வைத்து வெளியிலுள்ள தொழிலாளர்களை அவர்களுடைய வறுமையைப் பயன்படுத்தி மில்லுக்குள் கடத்திச் செல்ல முயற்சிக்கிறார்.

#### முதலமைச்சரிடம் வலியுறுத்தல்

இதற்குமாவட்டகலெக்டரும், சிலஉதலபோலீஸ்அதிகாரிகளும் உடந்தையாக இருப்பதாகத் தெரிகிறது. இந்த அதிகாரிகளின் தலையீட்டை ஆட்சேபித்து ஒரு தொழிற்சங்கதூதுகோஷ்டி 24—8—72 அன்று சென்னை கோட்டையில் முதலமைச்சரைச் சந்தித்தது!

மத்திய அரசின் முடிவு தெரியும்வரையில் சர்மா செய்யும் தில்லுமுல்லுகளுக்கு மாவட்ட கலெக்டரோ, போலீஸ் அதிகாரிகளோ எவ்விதத்திலும் உடந்தையாக இருக்கக் கூடாது என்று உத்தரவு பிறப்பிக்குமாறு தூது கோஷ்டி முதலமைச்சரை வற்புறுத்தியது.

9—3—72ல் பஞ்சாலை ஒப்பந்தப்படி திறக்கப்பட வேண்டிய 7 மில்களில் இதுவும் ஒன்றாகையால், மத்திய அரசை துரிதமாக உத்தரவு பிறப்பிக்கும்படி மாநில அரசு வற்புறுத்த வேண்டுமென்றும் தூதுகோஷ்டி வற்புறுத்தியது. பரிசீலித்து ஆவன செய்வதாக முதலமைச்சர் வாக்குறுதியளித்தார்.

#### எம். எல். ஏ.க்கள் கோரிக்கை

தூதுகோஷ்டியில்தோழர் கே ராமர் (சிஐடியூ), தோழர் கான் (ஏஐடியூசி) மற்றுமிரு திமுக ஊழியர்களும் இருந்தனர். தென்காசி திமுக எம் எல் ஏ கதிரவனும் உடன் சென்றிருந்தார்.

25-8-72 அன்று சட்டமன்ற எதிர்க்கட்சித்தலைவர் திரு பொன்னப்பநாடாரும் வலது கம்யூனிஸ்டு எம் எல் ஏ. திரு எம் அழகிரிசாமியும் மற்றும் சில எம் எல் ஏக்களும் முதலமைச்சரை சந்தித்து மில்லை, அரசே ஏற்று நடத்துவதைத்தான் தொழிலாளிகள் விரும்புவதாகவும், எனவே முதலாளி சர்மாவுக்கு கலெக்டரோ மற்றும் போலீஸ் அதிகாரிகளோ எவ்வித உதவியும் அளிக்கக் கூடாதென்றும் முதலமைச்சரிடம் வற்புறுத்தினார்கள் கவனித்துவேண்டியதைச் செய்வதாக முதலமைச்சர் கூறினார்.

சர்மாவின் முயற்சி பலிக்காதென்று தூதுகோஷ்டியினர் நம்பிக்கையுடன் தெரிவித்தனர்.

ந. நி.

---

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக் குழு சார்பில். தீக்கதிர் அச்சகத்தில் (13, முதல் சந்து, வடக்குச் சித்திரை வீதி, மதுரை-1) அச்சிட்டு வெளி ஆசிரியர்: கே. முத்தையா.